# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – ஆனி, ஆடி

2021 – ஜுன், ஜுலை

கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்ற கோவிட்-19 தடுப்பூசி முகாம்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – ஆனி, ஆடி

2021 – ஜூன், ஜூலை    இதழ் – 108, 109



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ்    ரூ **10.00**
ஆண்டுச் சந்தா    ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

## திருஞான சம்பந்தர்

அருமறை ஏகம் என்றது அமையும் என்றுணர்த்தல் போல

ஒருமறை யவன்மால் சுட்டி உணர்தரா ஒன்றைச் சுட்டித்

திருமறை யவனும் காணச் சிறந்தொரு விரலால் காட்டும்

பெருமறை முழங்கும் காழிப் பிள்ளைதாள் சென்னி சேர்ப்பாம்.

– *கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்



ஏறக்குறைய இரண்டரை ஆண்டுகள் இருட்டிலே இடர்ப்பட்ட பின்னர் இருள் விலகுவது போலவும் சூரிய ஒளி வரக்கூடுவது போலவும் கண்ணுக்குத் தெரிகிறது. உலகெங்கும் இரண்டு ஆண்டுகளுக்கும் மேலாகத் துயர்கொடுத்து வந்த கொரோனா பெருந்தொற்று அளவிலும் கொடுமையிலும் குறைந்து வருகிறது, தொடர்ந்து வடிவ மாற்றம் பல பெற்றுத் துயர் தரலாம் என்று உலக சுகாதார விஞ்ஞானிகள் உரைக்கிறார்கள். ஆனால் அவர்களே அவற்றால் பாதிப்புகள் அதிகம் இராது என்றும் ஆறுதல் அளிக்கிறார்கள். இந்தச் சூழ்நிலையில் பள்ளிகள், கல்லூரிகள் திறக்கப்பட்டு மாணவர்கள் நேரடி வகுப்பிற்கு வருகின்ற சாத்தியக் கூறுகள் அதிகம் தென்படுகின்றன.

கடந்த இரண்டு ஆண்டுகளாக, கொரோனா பெருந்தொற்றால் யாவரும் அனைத்துத் துறைகளும், தொழிற்சாலைகள், வியாபாரக் கடைகள் பாதிக்கப்பட்டு வருமானத்தை இழந்து மக்கள் சொல்லொணாத துயரை அடைந்திருக்கிறார்கள். இதில் மிகவும் பாதிக்கப்பட்ட துறைகள் சுற்றுலாத் துறை, உணவகங்கள் (Tourism and hospitality section) இரண்டு துறைகளும் மிக மிக அதிகமாகப் பாதிக்கப்பட்டு, மீள்வதற்குப் பல ஆண்டுகள் ஆகலாம் என்ற நிலையில் உள்ளன. மூன்றாவதாகப் பாதிக்கப்பட்டது கல்வித்துறை. அரசு, அரசு உதவிபெறும் மற்றும் தனியார் பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற்றில் லெட்சக்கணக்கில் பணிபுரிகின்ற ஆசிரியப் பெருமக்கள், கோடிக்கணக்கில் பயில்கின்ற மாணவர்கள் அனைவரும் பொருளாதார அறிவு நிலை, உடல் சுகாதாரம் என அனைத்திலும் சேதமடைந்திருக்கிறார்கள். குறிப்பாக மாணவர்களுடைய மனநிலை, ஒழுக்க நெறிமுறைகள் காலக்கட்டுப்பாடு அனைத்தும் பெரும் சேதத்திற்கு உள்ளாகி உள்ளது. இவற்றை மீட்பதற்கு ஆசிரியப் பெருமக்கள் பெரிய அளவிலே முயற்சி எடுத்துச் சாதிக்க வேண்டிய கட்டாயத்தில் உள்ளார்கள்.

இப்பொழுது விடியல் வரும் நேரம், அதனால் நம்முடைய ஆசிரியப் பெருமக்கள் அனைவரும் மேற்சொன்ன பெரும் சவாலை எதிர்கொள்ளத் தங்களைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டும். மாணவர்களுடைய மனம், ஈடுபாடு, கவனிப்பு அனைத்தும் சிதறி உள்ளன. அவற்றைச் சீர்படுத்தி ஒரு முகமாகக் கற்கின்ற ஆர்வத்தை ஆசிரியப் பெருமக்கள் மாணவர்களுக்கு ஊட்ட வேண்டும். மாணவர்கள் மனமாற்றம், உற்சாகமின்மை, ஆர்வமின்மை இவற்றிலிருந்து தங்களை மீட்டெடுத்துக் கொள்ளச் சுய முயற்சி செய்ய வேண்டும். மன உறுதியோடு இப்பொழுது உள்ள கோளாறுகளை நீக்கித் தங்களை ஆர்வமுடன் கற்கின்ற மாணவர்களாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

தற்பொழுது நடந்துவரும் இணையவழி கற்பித்தல் முறையிலே நம்முடைய ஆசிரியர்கள் மாணவர்களுக்கு அறிவூட்ட, அவர்கள் நெஞ்சிலே கருத்துக்களைப் பதிய வைக்க நேரிடை வகுப்புகளைத் தருகின்ற உழைப்பைப் போல மும்மடங்கு உழைப்பும் நேரமும் செலவழிக்கிறீர்கள். உங்கள் அனைவரின் உழைப்பிற்கும் எனது பாராட்டுகள்; வாழ்த்துக்கள். இதே அளவு உழைப்பை வருகின்ற காலங்களிலும் நேரடி வகுப்புகளிலும் செலுத்தி மாணவர்களின் ஆர்வத்தை வேறு திக்குகளில் இருந்து கற்கும் திசை நோக்கித் திருப்ப வேண்டும். மாணவர்களின் எதிர்கால வாழ்க்கை முன்னேற்றம் எக்காலத்தையும் விட இன்றைய சூழ்நிலையில் ஆசிரியருடைய பொறுப்பில் தான் இருக்கிறது. இதனை உணர்ந்து முழு ஈடுபாட்டுடன் நீங்கள் குழந்தைகளுக்குக் கற்பிக்க வேண்டும், இது என்னுடைய வேண்டுகோள்.

நான் தமிழை முறைப்படி படித்தவன் இல்லை. இருந்தாலும் பள்ளிக்காலத்திலும் கல்லூரிக் காலத்தும் என்னுடைய தமிழ் ஆசிரியப் பெருமக்கள் திறமையாலேதமிழ் ஆர்வமும் இலக்கிய ஈடுபாடும் ஏற்பட்டன. மீனாட்சி சுந்தரேஸ்வரர் உயர்நிலைப் பள்ளி (அப்பொழுது அது உயர்நிலைப்பள்ளி) என்னுடைய தமிழ் ஆசிரியர்களுக்கான மாசிலாமணி தேசிகர், முடியரசன், தமிழண்ணல் ஆகிய

பெருமக்களாலே என்னுடைய தமிழ் ஆர்வம் தோன்றி வளர்ந்தது; அதற்கு நீரும் உரமும் அளித்தவை கம்பன் விழாவும், திருக்குறள் விழாவும் அவ்விழாக்களிலே கேட்டு மகிழ்ந்த இலக்கியச் சொற்பொழிவுகள், பட்டிமன்றங்கள், வழக்காடு மன்றங்கள், கவியரங்கங்கள் அனைத்தும் என்னுடைய ஆர்வத்தை வெகுவாகத் தூண்டின. என்னுடைய வாழ்நாளிலே மறக்கமுடியாத தமிழ்ப் பெரியவர்களாக, கம்பன் அடிப்பொடி சா. கணேசன், பேராசிரியர். அ.ச. ஞானசம்பந்தம், பேராசிரியர். அ. சீனிவாசராகவன், கம்யூனிஸ்ட் பெரியவர்கள் ப. ஜீவானந்தம், எஸ். ராமகிருஷ்ணன், பேராசிரியர்.வ.சுப. மாணிக்கம், பேராசிரியர். .இரா.சாரங்கபாணி மற்றும் கவிஞர்கள் கவியரசு கண்ணதாசன், பேரா.கவிஞர் க. தேசிகன், ச.து. சு. யோகியார் ஆகிய கவிஞர்கள். பாரதியார், பாரதிதாசன் மேற்சொன்ன மூன்று கவிஞர்களின் கவிதைகளைப் படித்து கவிதாரசிகன் ஆனேன். ஓரளவு நல்ல கவிதைகள் எழுதவும் பழகினேன். இவை அனைத்திற்கும் வித்திட்டவர்கள் என்னுடைய பள்ளித்தமிழ் ஆசிரியர்கள்.

இதைப் போல மாணவர்களுடைய மனத்தில் ஆர்வத்தை விதைத்துத் தூண்டி வளர்த்தால் சிறந்த மாணவனை, உயர்ந்த மனிதனை நீங்கள் உருவாக்க முடியும். முயல்வீர்களாக, வெற்றி பெறுவீர்களாக, முயற்சி திருவினையாக்கும்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### (கூனி, கைகேயி பாத்திரப் படைப்பு)

### (சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

ஓர் இலக்கியத்தைப் படிப்பது என்பது மேலெழுந்த வாரியாகக் கதைப் போக்கை, காவியப் போக்கைப் படித்து ரசிப்பது. அதே நேரத்தில் இலக்கியத்தைக் கற்பது என்பது இலக்கியக் கருத்துக்களை ஆழ்ந்து கற்று அவற்றின் அழகை மனதில் பதித்து ரசிப்பது; இலக்கியத்தை ஆராய்வது என்பது முழுகிக் கற்று யாவராலும் ஒப்புக் கொள்ளக் கூடிய இலக்கியத் திறனாய்வு இயற்றுவது ஆகும். தற்பொழுது அனைத்து இலக்கியங்களும் பற்பல தமிழ் அறிஞர்களால் முழுகிக் கற்று ஆய்வு செய்து அருமையான திறனாய்வு நூல்களையும் முனைவர் பட்டக் கருத்துப் பெட்டகங்களையும் உருவாக்கி இருக்கிறார்கள்.

ஓர் இலக்கியத்தைக் கற்கின்ற அடித்தள மாணாக்கனான நான் கம்பராமாயணத்தைப் படிக்கத் தொடங்கினேன். என்னுடைய தமிழ் ஆர்வம், இலக்கிய ஆர்வம் இரண்டும் தூண்டப்படக் காரணமாக இருந்தது நான் பிறந்த காரைக்குடி மண். நாங்கள் பள்ளி, கல்லூரியிலே கற்கின்ற காலத்தில் காரைக்குடித் திருநகரில் அனைத்து இலக்கியங்களும் மக்களால் கொண்டாடப்பட்டன. ஆர்வலர்களால் விழா எடுக்கப்பட்டன. 1950 – 60 களில் காரைக்குடித் திருநகரில் அனேக படிப்பகங்களும் மன்றங்களும் இருந்தன. எல்லா இலக்கியங்களுக்கும் விழாக்கள் எடுக்கப்பட்டன. கம்பர் விழா, திருக்குறள் விழா, சிலப்பதிகார விழா, சேக்கிழார் விழா என அனைத்துப் பெரும் புலவர்களுக்கும் விழாக்கள் எடுக்கப்பட்டன. அவற்றில் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம், வழக்காடுமன்றம் என அனைத்து விதமான இலக்கிய ஆர்வத்தைத் தூண்டுகின்ற பேச்சுக்களும், கூடவே இசை நடன அரங்குகளும் நடந்தன. இவற்றாலே அன்றைய காரைக்குடி இளைஞர்கள் தமிழ் மொழியில் ஆர்வமும் இலக்கியக் கல்வித் தொண்டாற்றும் மனப்பான்மையும் கொண்டு விளங்கினார்கள்.

பட்டிமன்றம் என்ற புதிதான ஒரு கருத்து விளக்க முறையைத் தமிழகத்திற்கு அறிமுகம் செய்தது காரைக்குடிக் கம்பன் கழகம்.

செய்தவர் வணக்கத்திற்குரிய கம்பன் அடிப்பொடி அண்ணல் சா.கணேசன் அவர்கள். கம்பன் கழகப் பட்டிமன்றங்களிலே கருத்தரங்கங்களிலே கலந்து கொள்ளாத தமிழ் அறிஞர்கள் சொற்பொழிவாளர்கள் தமிழ்பேசும் நல்லுலகில் யாரும் இல்லை. நல்ல அறிஞர்களை, சொற்பொழிவாளர்களைத் தேடிப்பிடித்து மேடை ஏற்றி உலகிற்கு ஒளி விளக்காய்த் திகழ்ந்தவர் அண்ணல் சா.கணேசன் அவர்கள். எனக்கு 10,12 வயதினிலே நான் கேட்ட பட்டிமன்றப் பேச்சுக்கள் இன்னும் நினைவில் உள்ளன. உதாரணமாக வீரத்தில் சிறந்தவர் இராவணனா, கும்பகர்ணனா, இந்திரஜித்தா என்ற தலைப்புடைய பட்டிமன்றம்; இதில் இடம் பெற்ற மூவருமே வேண்டாத குணங்களை உடையவர்கள்; இருந்தாலும் நல்ல வீரர்கள். பட்டிமன்றத்திலே இராவணன் சிறந்த வீரர் என்ற கட்சியிலே பேரா. மூத்த தமிழ் அறிஞர் அ.ச. ஞானசம்பந்தம் அவர்களும், கும்பகர்ணனே என்ற கட்சியில் ஆங்கில ஆசான் கம்யூனிஸ்ட் தோழர் S.இராமகிருஷ்ணன் அவர்களும், இந்திரஜித் என்ற கட்சியில் கம்யூனிஸ்ட் தோழர் சிறந்த தமிழ்ச் சொற்பொழிவாளர் ப.ஜீவானந்தம் அவர்களும் பேசினார்கள். இந்தக் குறிப்பிட்ட பட்டிமன்றம் நடந்த நேரத்தில் ஏறக்குறைய 2000 தமிழ் ஆர்வலர்கள் கூடியிருந்த சபையிலே பூரணமான நிசப்தம் நிலவியது. அவ்வாறு அருமையாக இருந்தது அவர்களின் பேருரை. இந்தப் பட்டிமன்றத்தைக் கேட்டு மகிழ்ந்த நாங்கள் பின் வந்த பல நாட்கள் இதைப் பற்றி எங்களுக்குள்ளேயே விவாதித்து மகிழ்ந்திருக்கிறோம்.

அதே போல, காரைக்குடித் திருக்குறள் கழகம் நடத்திய குறள் விழாவிலே கவியரங்கம் மிகப் புகழ்பெற்று விளங்கியது. அன்றைய காலம் தலைசிறந்த கவிஞர்கள் அனைவரும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். கண்ணதாசன், முடியரசன், வாணிதாசன், சுரதா, ச.து.சு யோகியார் போன்றவர்கள் தலைமை ஏற்று நடத்த, கவிஞர்கள் புதுவயல் சிவனடியான் அரு. சோமசுந்தரம், நாரா. நாச்சியப்பன், புதுவயல் வீ. மெய்யப்பன், அர. சிங்கார வடிவேலன், சொ.சொ.மீ.சுந்தரம், மீனவன் போன்ற கவிஞர்கள் பங்கு கொண்ட கவியரங்கங்கள் மதியம் 2 மணி வரை கூட அமைதியாகக் கேட்டு ரசித்தார்கள். குறிப்பாக என் நினைவில் இருப்பது வள்ளுவர் வாக்கில்

“ஒன்பான் சுவை” என்ற தலைப்பில் குறளிலே காணப்பட்ட நவரசங்களையும் உணர்வோடும் சொல் அழகோடும் பொருத்தமான உவமைகளோடும் பாடிய கவியரங்கத்தின் நிழல் இன்றும் நினைவில் இருக்கிறது. குறிப்பாக, புதுவயல் கவிஞர் சிவனடியான் அவர்கள் சிருங்காரம் பற்றியும் வீர மெய்யப்பன் பாடிய வீரத்தின் சாரமும், நாரா. நாச்சியப்பன் பாடிய அவலத்தின் சோகமும் இன்றும் மனதில் நினைவு இருக்கிறது. கவிதை வரிகள் நினைவில் இல்லாவிட்டாலும் ரசித்த உணர்வு நெஞ்சில் நிறைந்து இருக்கிறது.

இவை போலவே சேக்கிழார் விழா, சிலப்பதிகார விழா, தியாகராஜர் ஆராதனை, அருணகிரிநாதர் விழா அனைத்தும் காரைக்குடியில் ஆண்டு தோறும் நடத்தப்பட்டு வந்தன.

இவற்றிற்கும் மேலாக, தேவகோட்டையில் குறள் விழா, சேக்கிழார் விழாக்கள், கீழச்சீவல்பட்டியில் பொங்கலை ஒட்டித் தமிழர் திருவிழா மூன்று நாட்கள் நடத்தப்பட்டன. இவை அனைத்தும் மிக்க இலக்கியத் திறம் வாய்ந்ததாகக் கேட்டு ரசித்து மகிழத்தக்கதாக இருந்தன.

இவ்விழாக்களாலே விதைக்கப்பட்ட தமிழ் ஆர்வமும் இலக்கிய ஆர்வமும் என்னுடைய தமிழ் ஆசிரியப் பெருமக்களாலே வேரூன்றிச் செழித்து வளர்க்கப்பட்டன. ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் உயர்நிலைப் பள்ளியில் என்னுடைய தமிழ் ஆசிரியர்கள் தமிழ் அண்ணல், முடியரசன், ப. மாசிலாமணி தேசிகர் ஆகியவர்களும் அழகப்பா கல்லூரியில் பேரா முனைவர்.வ.சுப.மாணிக்கம், பேராசிரியர் இரா.சாரங்கபாணி, சிவகுருநாதன், க. தேசிகன், பூ.அமிர்தலிங்கம், அ.மா.பரிமணம், சு.குழந்தைநாதன் ஆகியவர்களால் உரம் போட்டு வளர்க்கப்பட்டன. அதனைத் தொடர்ந்து பேரா.அ.ச.ஞானசம்பந்தம், பேரா.அ.சீனிவாசராகவன் ஆகியவர்கள் தொடர்பினால் தமிழ் ஆர்வம் வேரூன்றி இளம் மரமாக வளர்க்கப்பட்டது.

துரதிஷ்டமாக ஏறக்குறைய 27 ஆண்டுகள் தமிழ் பேசாத ஊர்களிலே வயிற்றுப் பிழைப்பின் காரணமாகப் பணியாற்ற வேண்டிய கட்டாயத்தில் தமிழ் ஆர்வம், இலக்கிய ஆர்வம் இரண்டும் பயன்படுத்தப்படாத இரும்பாகத் துருப்பிடிக்க ஆரம்பித்தன. இந்தச் சூழ்நிலையில் நான் வணங்கும் தண்டாயுதபாணி அருளாலும் என்

பெற்றோர் செய்த புண்ணியத்தாலும் கோவிலூர் திருமடத்தின் தொடர்பு 1997ல் ஏற்பட்டது. இதனால் காய்ந்து போன செடியை மீண்டும் உரமிட்டு நீர்வார்த்துப் பழைய நிலைக்குக் கொண்டு வந்தேன். இதற்கும் காரணம் நான் பிறந்த காரைக்குடி மண்ணே.

இந்தச் சூழ்நிலையில் தமிழ் வேதாந்தம் கற்கவும் கற்பிக்கவும் வாய்ப்பு ஏற்பட்டது. மீண்டும் தமிழ் இலக்கியத் தொடர்புகளை நட்புகளைத் தேடிப்பிடித்துச் சேர்த்துக் கொண்டேன், சேர்ந்தேன். கோவிலூர் திருமடத்தின் சார்பாக, திருநெல்லை என்கிற ஆன்மீக இலக்கிய இதழையும் கௌரவ ஆசிரியராக இருந்து நடத்தும் பொறுப்பும் ஏற்பட்டது. அதன் வழியாக வேதாந்த நூல்களையும் பெரிய புராண நாயன்மார்கள் வரலாறு பற்றியும் கற்கின்ற, எழுதுகின்ற வாய்ப்புக் கிடைத்தது. இவற்றோடு கம்பராமாயணத்தை நிதானமாகப் பொருளறிந்து படிக்கவும் ரசித்து மகிழவும் வாய்ப்பு ஏற்படுத்திக் கொண்டேன். அதனைத் தொடர்ந்து கம்பராமாயணத்தில் நடுத்தர மக்களுக்கும் இலக்கியம் அறியாத சாதாரண அன்பர்களுக்கும் கம்ராமாயணத்தின் பெருமை, கம்பரின் பாத்திரப் படைப்பின் அருமை தெரிகின்றவாறு எழுதும் பேறும் கிடைத்தது.

கம்பராமாயணத்தைக் காண்டம் வாரி, படலவாரி நடந்தவற்றைத் தெளிவாக எழுதுவதற்குப் பல நூல்கள் உதவியாக இருக்கின்றன. அண்ணாமலை பல்கலைக்கழகக் கம்பராமாயணப் பதிப்பு (மூலமும் உரையும்) மூவர் இராமாயணம் (வால்மீகி, கம்பர், துளசிதாசர்) சக்கரவர்த்தி இராஜகோபால் ஆச்சாரியாரின் சக்கரவர்த்தித் திருமகன், கிருபானந்த வாரியாரின் கம்பராமாயணமும் கோவை கம்பர் பி.ஜி. கருத்திருமனின், கம்பர் கவியும் கருத்தும் என்ற நூல், பள்ளத்தூர் பழ. பழனியப்பன் அவர்களின் கம்பராமாயணம் (6 – தொகுதிகள் – மூலமும் உரையும்) மற்றும் கம்பன் அடிகூடி பழ.பழனியப்பன் அவர்களின் கம்பராமாயணம் (சுருக்கப்பதிப்பு 6 தொகுதி) ஆகியவைகள் எனக்குப் பெரிதும் உதவின.

அதே சமயம் கம்பருடைய பாத்திரப்படைப்பை அறிந்து கொள்ளவும் பாத்திரங்களின் மேன்மையைத் தெரிந்து கொள்ளவும் என்னுடைய அறிவிற்கு மேற் சொன்ன நூல்கள் அதிகம் உதவவில்லை.

இந்த விஷயத்தில் கம்பனை அணு அணுவாகக் கற்று ரசித்து மகிழ்ந்த கம்பர் அறிஞர் மூத்த தமிழ்ப் பேராசிரியர் இலக்கிய மேதை தமிழ் இலக்கியத் திறனாய்வின் தந்தை அ.ச. ஞானசம்பந்தம் அவர்களின் நூல்களும் கம்பனை ஆர்வத்தோடு கற்றுக் கம்பர் மேடைகளிலே முழங்கியும் சென்னை கம்பன் கழகத்தில் தலைமை ஏற்று மிகச் சிறப்பாக நடத்திய சட்ட வல்லுநர் நீதியரசர் நீதிபதி மு.மு.இஸ்மாயில் அவர்களின் நூல்களும் பெரிதும் பயன்பட்டன.

என்னுடைய இந்தக் கம்பராமாயணத் தொடரில் நான் எழுதுகின்ற பாத்திரங்களின் சிறப்பும் அவை பின்னப்பட்ட நேர்த்தியும் குணாதிசயங்களை வர்ணித்த அழகும் பெரும்பாலும் பேரா. அ. ச. ஞானசம்பந்தம் அவர்களுடைய நூல்களிலிருந்து எடுத்து ஆளப்பட்ட கருத்துக்களே ஆகும். இதனை நாம் நம்முடைய வாசக அன்பர்களுக்கும் கம்பராமாயணப் பிரியர்களுக்கும் தெரிவித்துக் கொள்கிறேன்.

### கூனி

கூனி என்ற கதாபாத்திரம் கம்பர் காப்பியத்தில் செயல்படுவதாகக் கூறப்படுகின்ற காட்சி ஒன்றே ஒன்று தான். இராமர் பட்டாபிஷேகத்தைத் தடுத்து நிறுத்தி 14 ஆண்டுகள் தவம் இயற்றக் கானகம் அனுப்பி வைக்கக் காரணமாக இருந்த காட்சி ஒன்றே கூனியினுடைய துரித செயல்பாட்டுக் களமாகும். பின்வரும் எந்தக் காட்சியிலும் கம்பர் காப்பியத்தில் அவளுடைய பெயர் கூடச் சொல்லப்படவில்லை. கம்பர் கூனி என்கிற பாத்திரத்தை அறிமுகப்படுத்தும் பொழுது அவளுடைய இயற்பெயர் மந்தரை என்று கூடச் சொல்லாமல்

**இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்**
**துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள் என்கிறார்.**

இப்படி ஒரே காட்சியில் தோன்றிக் காப்பியப் போக்கைத் தலைகீழாக மாற்றிய வித்தைக்காரி கூனி தான். அவளுடைய வினைமிகு சூழ்ச்சியினாலும் துர்போதனையினாலும் திரிந்த பாலாகக் குணம் மாறிய கைகேயினுடைய செயல் இராவணன் எனும் ஆலமரம் அழிவிற்கு விதைக்கப்பட்ட சிறு விதையாகும்.

கூனி என்ற கதாபாத்திரத்தைக் கம்பன் மிக அழகாகக் காப்பியத்தைப் படிப்பவர்கள் நெஞ்சிலே காழ்ப்புணர்ச்சியை, தீ போலப் பரவ விடுகின்ற வினையம் பிடித்தவளாக, தீவித்தைக்காரியாகக் காட்டுகிறான்.

கூனி இயல்பாகவே தீய எண்ணங்களும் சூழ்ச்சித் திறமையும் வாக்குச் சாதுரியமும் மனத்தின் கூறுகளை அறிகின்ற திறனையும் கொண்டவளாகப் படைக்கின்றான்.

இளவயதில் இராமபிரான் தம்பிகளோடு இணைந்து பிள்ளை விளையாட்டில் உண்டிவில்லால் எய்த உருண்டை தவறுதலாகக் கூனியின் முதுகில் பட, சிறுவர் நால்வரும் கைகொட்டிச் சிரிக்க, கூனிக்குக் கோபம் அதிகம் வந்தது. ஆனால் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அவளுக்கு நன்றாகத் தெரியும்; மூத்தவன் இராமனைக் கைகேயி தன் மகனினும் அதிக அன்பு செலுத்தி வளர்த்து வருகிறாள் என்று. எனவே தன் புகார் இப்பொழுது எடுபடாது என்று வஞ்ச உள்ளத்தில் மறைத்து வைத்து நேரம் பார்த்துக் காரியம் சாதிக்கக் காத்திருந்தாள்.

இராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் செய்வது என்று முடிவான செய்தியும் அதனால் நாட்டு மக்களிடையே தோன்றிய மகிழ்ச்சியும் ஆரவாரமும் கூனியின் மனதில் வெறுப்பையும் பழிவாங்கும் கடுமையையும் அனல் போலக் கிளறிவிட்டன. அனல் கொப்பறை போல் கொதிக்கும் உள்ளத்தோடு கைகேயியின் அரண்மனைக்குள் வந்தவள் கைகேயி மலர்ந்த முகத்துடனும் மகிழ்ச்சிப் புன்னகையுடனும் உறங்குவதைக் கண்டு கொதித்து எழுந்தாள். உனக்கும் உன் புதல்வனுக்கும் கேடு வரப்போகிறது; இது புரியாமல் தூங்குகிறாயே என்கிறாள்.

**பிணங்குவான் பேர்இடர் பிணிக்க நண்ணவும்**
**உணங்குவாய் அல்லைநீ! உறங்கு வாய்!**

“என்று பதறி எழுப்ப கைகேயி. இந்த
**பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும்**
**உராவரும் துயரைவிட்(டு) உறுதி காண்பரால்**

**விராவரும் புவிக்கெலாம் வேத மேஅன**
**இராமனைப் பயந்தவெற்(கு) இடர்உண் டோ?"** என்றாள்.

என்னுடைய பிள்ளைகள் நால்வரும் தருமம் தவறாத பிறர் துயர் துடைக்கும் நல்லவர்கள். அதிலும் என் அரும் பெரும் புதல்வன் இராமன் இருக்கின்ற பொழுது கேடு என்ன வரும் என்று புன்னகையோடு எழுந்து உட்கார்ந்தாள். மந்தரை உடனே தன்னுடைய சூழ்ச்சி வியூகத்தை மாற்றிக் கொண்டாள். இராமருக்கு முடி சூடுவது உனக்குக் கேடு என்று சொல்வதைக் கைகேயி விரும்பமாட்டாள் என்பதை நன்கு உணர்ந்து சக்களத்தி பொறாமையைத் தூண்டினாள். இராமன் முடி சூட்டிக் கொண்டால் கோசலையின் பெருமையும் அதிகாரமும் பெருகும். நீயும் உன் பிள்ளை பரதனும் புறந்தள்ளப்படுவீர்கள்; அதனை இப்பொழுதே தடுத்துக்கொள். கைகேயி கோசலையும் இராமனும் அப்படிச் செய்யமாட்டார்கள் என்று அந்த வாதத்தை ஒதுக்கித் தள்ளினாள் மந்தரை வியூகத்தை. தசரத சக்கரவர்த்தி உன்னிடம் இப்பொழுது காட்டுகின்ற அன்பும் பிரியமும் பின்னர் கிடைக்காது, கோசலையின்பால் செல்லும். தன்னுடைய நல்அன்பிலும் பாசத்திலும் நம்பிக்கை கொண்ட கைகேயி அதனையும் உதறித்தள்ள, கடைசியாக எந்தப் பெண்ணுடைய மனத்தையும் கவலைப்படச் செய்யும் உன் தாய் வீடு இதனால் அழிந்து போகும் என்ற பிரம்மாஸ்திரத்தை எய்தாள்.

இராமன் முடிசூட்டிக் கொண்டால் கோசலையின் கை ஓங்கும், சீதையின் சக்தி அதிகமாகும். அதனால் சீதையின் தகப்பனான மிதிலாபுரி அரசன் ஜனகருடைய சக்தி பெருகும், வலிமை பெருகும். வானக நாடு உன் தகப்பனுடைய கேகய நாட்டின் பக்கத்தில் உள்ளது. பரப்பளவிலும் மிகப்பெரியது. இராமனுடைய மாதுலரான ஜனகருடைய கையோங்கி கேகய நாட்டிற்கு அழிவு ஏற்படலாம். இராமர் பட்டாபிஷேகத்தைத் தடுக்கத் தவறிய உன்னுடைய செயலினால் நீ பிறந்த கேகய நாடு அழிவதைக் காண்பதில் உனக்கு மகிழ்ச்சியா? இதனைக் கேட்ட கைகேயின் இரும்பு உள்ளமும் அனல்பட்ட மெழுகாக உருகியது. பால் போன்ற நல்ல உள்ளமும் விஷமாகத் திரிந்தது.

மனம் மாறிய கைகேயி கூனியைப் பார்த்து இராமர் பட்டாபிஷேகத்தை என்னால் நிறுத்த முடியுமா? அதற்கு வழி என்ன? என்ற சந்தேகத்தோடு கேட்டாள். உனக்குக் கொடுத்த இரண்டு

வரங்களைக் கொண்டு பரதனுக்கு முடி சூட்டச் செய். இராமனைக் கானகம் போகச் செய் என்று துர்போதனை செய்து அதில் வெற்றியும் கண்டவள் கூனி. இந்த ஒரு காட்சி கூனியின் வஞ்சச்சூழ் வினை இராவண ஆலமர அழிவிற்குப் போட்ட விஷ விதை ஆகும். இதுவே கம்பராமாயணத்தின் போக்கை முழுமையாக மாற்றிய காட்சி. மாற்றியவள் கூனி.

*(தொடரும்...)*

## மகாராஜா துறவு

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

**பாயிரம் :**

எழுதப்படுகின்ற அனைத்து நூல்களும், தடையின்றி நல்ல முறையிலே நிறைவு பெற வேண்டும் என்ற நோக்கத்துடன், இறைவனை வணங்கி, அருள் வேண்டித் தொடங்குவது அனைத்து நூலாசிரியர்களின் மரபு. இறை வணக்கத்துக்கு அடுத்ததாக, குரு வணக்கம், குறிப்பிட்ட நூலிலே உரைக்கப்படப் போகின்ற செய்தியின் சுருக்கம், அடுத்ததாக, இந்த நூலைக் கற்போர் பெறக்கூடிய பயன்கள், அடுத்ததாக நூலாசிரியர் நெஞ்சிலே, இந்த நூலைப் படைப்பதினாலே அகங்காரம் ஏற்பட்டு விடக்கூடாது என்ற நோக்கத்தில், அவையடக்கம் எழுதி வேண்டிக் கொள்வது மரபாகும். மேலே சொல்லப்பட்ட அனைத்தும் – நமஷ்கார மங்களம் (இறைவணக்கம்), வஸ்து நிர்த்தேச மங்களம் (எழுதும் பொருள் விளக்கம்) பலஸ்ருதி (நூற்பயன்) அவையடக்கம் என்று வடமொழியில் கூறப்படும். இவை அனைத்தும், தமிழில் பாயிரம் என்ற பிரிவில் அடங்கும்.

மஹாராஜா துறவு நூலில், கடவுள் வாழ்த்தாக, கணபதி வாழ்த்து, சற்குருமார்கள் மூவர் வாழ்த்து, ஆழத்துப் பிள்ளையார் வாழ்த்து, விருதாம்பிகை வாழ்த்து, சபாநாயகர் துதி, சிவகாமி அம்பிகை துதி, ஸ்தல வினாயகர் துதி, சுப்ரமணியர் துதி, அடியார் துதி ஆக ஒன்பது கடவுள் வணக்கப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன. அடுத்து அவையடக்கப் பாடல் ஒன்றும் பாடப்பட்டுள்ளது; ஆக மேற் சொன்ன பத்துப்பாடல்களில், குமாரதேவர் அருளியவையாக உள்ளன. அடுத்து இரண்டு பாடல்களும் பிற்காலத்தில் வந்த புலவராலோ குமார தேவர் அருளிய நூலைத் தொகுத்தவராலோ எழுதப்பட்டுள்ளன.

இவை பன்னிரண்டும் பாயிரம் என்ற பகுதியில் கூறப்பட்டுள்ளன. ஆனாலும் குமாரதேவர் பாடிய பத்துப் பாட்டுக்கள் மட்டுமே கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளன. பாயிரம், பாடல்கள் பத்து, நூற் பாடல்கள் நூற்றிப் பதினேழு ஆக நூற்றி இருபத்து ஏழு பாடல்களே குமாரதேவர் அருளிய மஹாராஜா துறவு என்ற நூல் ஆகும்.

*கணபதி முதலிய ஐவர்துதி :*

**அமரர்கள் பரவும் திருமுது குன்றில்**
**ஆழத்துப் பிள்ளையைச் சிகரிக்**
**குமரசற் குருவை இமகிரி ராஜ**
**குமரியாம் பெரியநா யகியை**
**மூமலமும் ஒருங்கே அகற்றிடும் முக்கண்**
**முதல்வனைச் சாந்தநா யகனை**
**நமதுஎணப் படியே முடிந்திடத் தினமும்**
**நாடிநின்று இறைஞ்சிவாழ்த் திடுவோம்.**

முதற் கடவுள் வணக்கப் பாடலிலே குமாரதேவர், திருமுதுகுன்ற ஸ்தலத்தில், அமர்ந்து அருள்பாலிக்கும் ஐந்து தெய்வங்களை வணங்குகிறார். ஆழத்துப் பிள்ளையார் என்று அழைக்கப்படும் விநாயகர் கயிலை மலையில் அமர்ந்து அண்ட சராசரங்களையும் ஆள்கின்ற முக்கண் ஈசனையும், இமையகிரி ராஜன் புதல்வியான பர்வதவர்த்தினி (பார்வதி) அம்மையையும் திருமுதுகுன்றத் திருக்கோவிலின் கோபுரத்தில் அமர்ந்துள்ள குமாரக் கடவுளையும், தன்னுடைய பிறவி அழியக் காரணமான சற்குருநாதர் சாந்தலிங்க ஸ்வாமிகளையும் ஆக ஐந்து கடவுளர்களையும் தான் படைக்க எடுத்துக் கொண்ட மஹாராஜா துறவு என்னும் உயர்ந்த நூலை எவ்விதத் தடையுமின்றிச் செம்மையாக நிறைவடைய விண்ணப்பித்து வேண்டி வணங்கினார். நாமும் வணங்கி அருள் பெறுவோமாக. முக்கண் முதல்வனை வணங்குவோம் என்ற குறிப்பின் மூலமாக, சிவ பெருமானுக்கு முக்கண் உள்ளதையும், நெற்றிக் கண் மூலமாக ஆறுமுகப் பெருமானைப் பிறப்பித்து அருளியதும், திரிபுரம் எரித்து, தேவர்களையும் ஏனைய ஜீவர்களையும் காத்ததையும் (முப்புரம் என்பது மும்மலங்களை எரித்ததாகும். கன்மம், மாயை, கோபம்) பாடுகிறார்.

*<u>மூன்று குருமூர்த்திகள் வணக்கம் :</u>*

**மறைமுடிவு அதனில் விளங்கிடும் ஒளியே**
**மனிதரைப் போலவந்து எனது**
**சிறைதவிர்த்து ஆண்ட சிவப்பிர காச**
**தேசிகன் தன்னைமற்று அவன்தன்**
**நறைமலர் அடியைப் போற்றிடும் சாந்த**
**நாயகன் தன்னைமற்று அவன்தன்**
**நிறையருள் பெற்ற பழனிமா முனியை**
**நெஞ்சினுள் இருத்தியே பணிவாம்.**

தன்னுடைய அருட்குருமூர்த்தி சாந்தலிங்க நாயகரையும், அவர்தம் குருவாகிய சிவப்பிரகாச தேசிகரையும் சாந்தலிங்க நாயகரின் சீடரான பழனி மாமுனிகளையும் ஆழ் உள்ளத்தில் அமர்த்தி, வணங்கிப் பணிந்தார். குருவைப் பற்றிக் குறிப்பிடுங்கால் தன்னைப் பந்தபாசங்கள், மலங்கள் அனைத்தும் கூடிய சம்சார சாகரத்திலிருந்தும் பிறப்பு, இறப்பு சிறையிலிருந்தும், மீட்டு அளித்த குருவே வணக்கம். வேத வேதாந்தங்கள் விளங்கிடும், அருள் சைதன்யமே, பிரகாசப் பேரொளியே, உம்மை ஆழ்மனத்தில் நிறுத்தி வணங்குகிறேன். அருள் புரிவீர்களாக.

*<u>ஆழத்துப் பிள்ளையார் துதி:</u>*

**தொய்யின் முலைக்கோடு இரண்டுகவான்**
**துதிக்கை மூன்றுவிழி துரிசுஇல்**
**துய்ய சைவ முதல்மதமும்**
**துலங்க வரும்ஒண் பிடி உலகம்**
**உய்ய உதவும் ஒருகளிற்றை**
**உலவா விருத்த சைலத்தில்**
**வையம் பரவும் ஆழ்த்து**
**வாழ்ஐங் கரனை மனம் நினைவாம்.**

பரமசிவனின் இடப்பாகம் பிரியாமல், யாவர்க்கும் அருள்புரிகின்ற பராசக்தி (தேவியின் தந்தத்தில் பிரியாமல், யாவர்க்கும் அருள்புரிகின்ற பராசக்தி) அன்னையைப் பெண் யானையாக உருவகித்துப் பார்வதி தேவியைத் தழுவியதால் தேவியின் தந்தத்தில் பூசியிருந்த

சந்தனக்குழம்பு ஒளி வீசியது. அப்படிப்பட்ட பாகம் பிரியாளாகிய பார்வதியால் தோற்றுவிக்கப்பட்ட களிற்றின் உருவம் கொண்ட கணபதியே ஐந்து கரமுடைய ஆண்டவரே உம்மை உள் நினைந்து வணங்குகிறேன்.

இந்தப் பாடலைப் படிக்கின்ற போது, காஞ்சி மாநகரத்தில் பரமசிவன் தன்னை மணக்க வேண்டும் என்று விரும்பிக் கடும்தவம் மேற்கொண்டு தான் அமைத்த மணல் லிங்கம் வெள்ளத்தில் அழியாமல் இருப்பதற்காகக் கட்டி அணைத்துக் காப்பாற்றியதும், அப்பொழுது பரமசிவன் மார்பிலே தனக்கோடுகள் பதிந்ததும் ஆகிய வரலாறு நினைவுக்கு வருகிறது.

***விருத்தாம்பிகை துதி :***

**இருள்கலி வலியின் ஞானநல் நெறிகள்**
**இறந்து உயிர் கொடுநெறி மேவி**
**மருள்கொடு கலங்கா வகைகலி என்றும்**
**வந்துஅனு காப்பதி தன்னில்**
**தெருள்சத்தி கருணை உருவதாய் நின்று**
**தெளிவிக்கும் இறைவி எம்குரு ஓர்**
**அருள்கடல் பெரிய நாயகி உலகுக்கு**
**அனைமுதல் வியைப்பணிந் திடுவோம்.**

விருத்தாசலத்தில் அமைந்துள்ள சுவாமி பெயர் விருத்த கிரீஸ்வரர். இவரை முதுமலை ஈசன் பழமலை ஈசன் என்றும் அழைப்பார்கள். அம்பாள் பெயர் விருத்தாம்பிகை.

இக்கலிகாலத்தில் தர்ம நெறிகள் பிறழ்ந்து, அஞ்ஞானமும் அகம்பாவமும் நிறைந்து, அனைத்து ஜீவர்களுக்கும் தீராத துயரைத் தந்து கொண்டிருக்கின்றன. தர்மம் அழிந்து ஆன்மாக்கள் தீயவழியில் சென்று மயக்கம் கொண்டு அழியாதபடி காக்கும் ஞான சக்தியாக கருணைமிகு வடிவுடனே, ஜீவர்களை நெறிமுறையில் வாழ வைக்கும் இறைவியாக விளங்குகின்ற விருத்தாம்பிகை. அனைத்து உயிர்களையும் ஐயம், கலக்கம். மயக்கம் அகன்று தெளியச் செய்யும் ஞானதேவி விருத்தாம்பிகை. என்னுடைய ஞானா சிரியன், வணங்கிப் போற்றி ஞானம் பெற்ற நாயகியை உள்நினைந்து வணங்குவோம்.

*சபாநாயகர் துதி :*

**திங்கள்ஆர் சடையில் கங்கைநீர் துளிப்பத்**
**திருந்துஇழை உமைஉளம் களிப்பப்**
**பொங்குஅரா வொடுநல் புலிமுனிவர் கள்மால்**
**போதுஅயன் அமரர்கள் போற்றத்**
**துங்கநான் மறைகள் துதித்திட ஐந்து**
**தொழில்விரிந் திடபொது அதனில்**
**செங்கழல் அதிர நடம்செயும் பொருளைத்**
**தினம்பணிந்து இடர்ஒழிந் திடுவோம்.**

விரித்த சடையில் குளிர் நிலவும் கங்கையும் சேர்ந்திருக்க வியாக்ர பாரதர் பிரகாசமாக ஒளிவீசும், ஆடை அணி மணிகளுடன் கருணை பொழியும் சிவகாமி மனம் மகிழக் களிநடம் புரியும் சிவபெருமான் கழுத்தில் நல்ல பாம்புடன் தில்லைச் சிற்றம்பலத்தில் பொதுச் சபையில் ஆதிசேஷன் அம்சமான பதஞ்சலி முனிவரும் புலியின் கால்களை வரமாகப் பெற்ற வியாக்ரபாரதரும் மற்ற முனிவர்களும் அருகிருந்து கண்டு மகிழ ஆடினார். இந்த விரித்த சடையும் எடுத்த பொற்பாதமும் கண்டு நான்மறைகள் துதித்தன. இறைவனின் காரியமான ஆக்கல், காத்தல், அருளுதல், மறைத்தல், அழித்தல் ஆகிய ஐந்தொழில்களும் செம்மையாக நடைபெறச் சிற்சபைதனில் வீரக்கழல் அணிந்த பாதம் அதிர நித்தம் நடனம் செய்யும் நடராஜப் பெருமானை நாளும் மனதார வணங்கித் துயர்கள் தீர்ந்து வாழ்வோமாக.

*சிவகாமி துதி :*

**அருள்உருவாய் உயிர்கள் தமக்கு அன்னை ஆகி**
**அஞ்ஞானம் தனைஅகற்றி அமலம் ஆகி**
**மருள்இலதாய் மெய்ஞ்ஞானம் ஆகும் முத்தி**
**வாய்த்திடவே காத்துஅருளி வானோர் ஏத்த**
**இருள்கெடவே மிளிரும் இரும் கழல்கள் ஆர்ப்ப**
**இறைபுரியும் திருநடத்தால் களித்து வாழும்**
**தெருள்மருவு மறைநான்கும் பரவும் தில்லைச்**
**சிவகாம சுந்தரியைச் சிந்தை செய்வாம்.**

கருணை வடிவாகி, உலக உயிர்களுக்கு எல்லாம் தாயாகி, அஞ்ஞானத்தை அகற்றி, தூய்மையே வடிவாகி, மயக்கம் இல்லாத காட்சியாகி, மெய்ஞ்ஞானம் ஆகிய பேரின்ப வீடு கிடைத்திட அடியவர்களைக் காத்து, அவர்களுக்கு அருள் செய்யும் அன்னை, தேவர்கள் துதிக்கவும், அஞ்ஞான இருள் நீங்கவும் ஒளிவிடும் பெரிய வீரக்கழல்கள் ஒலி செய்ய, எப்பொருட்கும் இறைவன் ஆகிய சிவபெருமான் செய்யும் அழகிய திருநடம் கண்டு களிக்கும் நாயகி, நிலைத்து வாழும் தெளிவான நான்கு வேதங்களும் துதிக்கின்ற, தில்லையில் எழுந்தருளி உள்ள சிவகாம சுந்தரியை மனத்தால் சிந்தித்து வணங்குவோம்.

<u>விநாயகர் துதி :</u>

**செக்கர் போல் ஒளிர் முக்கண் சிலம்பினை**
**மிக்க பேர்அருள் வேலையை ஓர்கொம்பால்**
**தக்க அன்பர்க்கு உதவும் தருவினை**
**இக்க தைநிறை வேற இறைஞ்சுவாம்.**

செவ்வானம் ஒன்று ஒளிவிடும் முகமும் மூன்று கண்களையும் உடைய கற்பக மலையே விநாயகரே வணங்குகிறேன்.

நான் பாடத் தேர்ந்தெடுத்த இம்மாக்கதை செம்மையாக எழுதப் பெற்று முடிவுற வேண்டும் விநாயகனே அருள் செய்வாயாக.

<u>சுப்ரமணியர் துதி :</u>

**கடிகமழ் கரிய கூந்தல்**
**கனிமொழி துவர்வாய்த் தெய்வப்**
**பிடிதனக் கோட்டால் வள்ளிப்**
**பெண்கொடி படரும் செய்ய**
**படிபுகழ் புயமாம் குன்றில்**
**பாயவண் கழுநீர் நீபம்**
**மடல்அவிழ் செழுந்தார்ச் செவ்வேள்**
**மலர்அடி வணக்கம் செய்வோம்.**

வள்ளி என்கின்ற பூங்கொடி படர்ந்து வளர ஏதுவாக உள்ள சிவந்த தோள்களாகிய குன்றே, மணம் பொருந்திய கரிய கூந்தலையும்

தீங்கனி போன்ற இன்பச் சொற்களையும் செம்பவளம் போல் சிவந்த இதழ்களையும் உடைய தெய்வப் பெண் யானையின் தனங்கள் மோதிட அதனால் மனம் மகிழ்ந்து செவ்விதழ் விரிய, சிரிக்கின்ற முருகனே, செங்கழுநீர் கடப்பமலர் ஆகியவற்றால் புனையப்பட்ட மாலை அணிந்த முருகக் கடவுளே உன் திருமலர்ப்பாதம் பணிந்து வணங்குகின்றோம்.

## ஆடியார் துதி :

**வண்துழாய் அலங்கல் மாயவன் மலர்மேல்**
**வதிந்தநான் முகன்மறை அறியா**
**தொண்டைவாய்க் கெண்டை விழிக்கழை மொழிஒண்**
**துடிஇடை உமையைஓர் இடத்தில்**
**கொண்டகோள் அருளைப் பொருள் எனக் கருதிக்**
**குலவிய சாதனம் தரித்து**
**மண்டிய அடியார் யாவர்மற்று அவர்தாள்**
**மனத்தினும் சிரத்தினும் வைப்பாம்.**

வளமான துளசி மாலை அணிந்த திருமாலும், தாமரை மலர்மேல் இருக்கின்ற நான்முகனும், வேதங்களும் தேடி அறிய முடியாதவனும், கொவ்வைக் கனிபோன்ற வாயும் சேல்மீன் போன்ற கண்ணும், கரும்பு போன்ற மொழியும், ஒளியுடன் கூடிய உடுக்கை போன்ற இடையும் உடைய உமா தேவியை இடப்பக்கம் சேர்த்து அருளிய இறைவனும் ஆகிய சிவபெருமானின் அருளே பொருள் என நினைத்து விளங்கும் சமய சாதனங்களோடு சிவச் சின்னங்களையும் தாங்கி ஈசனிடம் அன்பு பெருகிய அடியவர்கள் எவரோ, அவருடைய பாதங்களை உள்ளத்திலும், தலையிலும் வைத்து வணங்குவோம்.

## அவையடக்கம் :

**சகரர்தம் வலியையும் தடம்தி ரைக்கடல்**
**அகலமும் பின்புஉளோர் அகழ்இ லஞ்சிதான்**
**புகழ்உற விளக்கலே போல இச்செயுள்**
**தகைதரு கலைஞர் நூல்தனை விளக்குமால்.**

சகரம் என்னும் அசுரனால் தோண்டப் பெற்ற பள்ளங்களில் நீர் நிறைந்து கடலானது சகரருடைய வலிமையை, கடல் விளக்குவது போல் பின்பு வந்தவர்கள், தோண்டிய குளங்கள், கடலில் பெருமையைத் தெளிவாக அறிவிப்பது போல நான்இயற்றுகின்ற இந்த நூல், மற்றைய சிறந்த நூல்களின் புகழை, பெருமையை விவரிக்கும். எனது நூல் ஒரு சிறு குட்டை; உண்மைப் புலவர்களின் நூல்கள் கடல் போன்றவை.

தொடர்ந்து பாயிரம் வாழ்த்து என்று இரண்டு பாடல்கள் பிற்காலப் புலவரால் பாடப் பெற்றுள்ளன.

<u>பாயிரம்</u>

**திங்கள்ஒண் கவிகைத் திகிரிஅம் திணிதோள்**
**திகழ்கடல் தானைமா ராஜன்**
**அம்கண்மா நிலத்தில் துறந்துவீடு அடைந்த**
**அரியஇக் காதையைத் தமிழால்**
**இங்குமா தவத்தோர் இசையும்என்று இசைப்ப**
**இசைத்தனன் வீஉறக் கேட்டோர்**
**கொங்குஅவிழ் பொழில்சூழ் பழமலை உறையும்**
**குமாரதேவு என்னும்மா முனியே.**

<u>பாயிரம் கூறியவரால் கூறப்பட்ட வாழ்த்து</u>

**சிவன்திரு உருவாம் ஐந்து**
**சின்மய எழுத்தும் வாழி**
**நவம்தரு நீரும் வாழி**
**நயனநன் மணியும் வாழி**
**கவின்தரும் குமார தேவன்**
**கழல்இணை இரண்டும் வாழி**
**அவன்திரு அடியார் தம்மோடு**
**ஆருயிர் அனைத்தும் வாழி.**

*(தொடரும்...)*

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

### 38

ஓரிடத்தில் விருந்து நடக்கிறது; அந்தச் சமயத்தில் தொடக்கத்தில் பெருத்த ஆரவாரம்; இலைகளுக்கு முன்னால் சென்று சாப்பிட வந்தவர்கள் உட்கார்ந்ததும், ஆரவாரம் சற்றுக் குறைய ஆரம்பித்தது; ஆனாலும் உணவு வகைகளைக் குறிப்பிட்டு, பூரி கொண்டுவா, கிழங்கு கொண்டு வா என்ற சப்தம் கேட்டுக் கொண்டிருந்தது; அடுத்து தயிர் சாப்பிடும் வேளை; கப் தயிர், தயிர் என்று குரல் மட்டும் கேட்டது; அதற்குப் பிறகு எந்தச் சப்தமும் எழவில்லை; சாப்பாடு முடிந்த பிறகு அவரவரும் தூங்கப் போய் விட்டனர்; அது போலவே கர்மங்களைப் பற்றிய ஆரவாரம் எழுதல் இயல்பே; பின்னர், பக்திவழியில் முன்னேற, முன்னேற, கர்மரீதியான செயல்கள் குறைந்து கர்மத்தியாகமும் சமாதி நிலையும் ஏற்பட்டுவிடுகின்றன.

### 39

ஓர் இடத்தில் செம்படவர்கள் மீன் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அந்த வழியில் வந்து ஒரு பருந்து ஒரு மீனைக் கவ்வி எடுத்துப் பறந்து சென்றது. மீனைப் பார்த்ததும் சுமார் ஆயிரம் காக்கைகள் ஒன்று சேர்ந்து பருந்தைத் துரத்த ஆரம்பித்தன; மீனைக் கவ்விக் கொண்டிருந்த பருந்து ஒவ்வொரு திசையாய்த் திரும்பித் திரும்பிப் பறந்து பறந்து அலைந்தது. சில நேரம் பருந்து வடக்கு நோக்கிப் பறந்தது; காக்கைகள் விடவில்லை; அடுத்து, பருந்து கிழக்கு நோக்கியும் மேற்கு நோக்கியுமாய்ப் பறந்து, பறந்து பார்த்தது; காக்கைகள் விடவில்லை; எப்படியோ பருந்து தன் வாயிலிருந்து மீனை விட்டுவிட்டது; மீன் கீழே விழுந்துவிட்டது. அப்போது காகங்கள் மீனை நோக்கிச் சென்று விட்டன; சற்றுத் தொலைவு பறந்து வந்த பருந்து ஒரு மரக்கிளையில் அமைதியாய் உட்கார்ந்து, இந்த மீன் எனக்கு எவ்வளவு குழப்பம் தந்து விட்டது! இப்போது நான் நிம்மதியாய் இருக்கிறேன்! என்று பருந்து அமைதி அடைந்தது.

40

பாதையின் ஓரத்தில் உள்ள மரங்களைப் பார்த்திருக்கிறோம்; அவை சிறுசிறு செடிகளாக இருக்கும் போது, நான்கு பக்கங்களிலும் வேலி அமைக்கிறோம்; அப்படி வேலி அமைக்காவிட்டால் ஆடு, மாடுகள் வந்து தின்று விடும்; செடியின் அடிமரம் பருத்து, தடிப்பாக வளர்ந்து விடும் போது, அதற்கு வேலி அவசியம் இல்லை; வளர்ந்த நிலையில் யானையைக் கூடக் கட்டிவைக்கலாம்; அடிமரமாக உன் மனத்தை வளர்த்து உறுதிப்படுத்திக்கொள்; இப்படியான விவேகத்தைப் பாடுபட்டு உருவாக்கிக்கொள்;

41

வேலைக்காரி ஒருத்தி எஜமானருடைய வீட்டைப் பற்றிப் பேசும் போது, என்னுடைய வீடு என்கிறாள்; ஆனால், அவளுடைய சொந்த வீடு ஏதோ ஒரு கிராமத்தில் இருக்கலாம்; எஜமானருடைய வீட்டைச் சுட்டிக்காட்டி, இது என்னுடைய வீடு என்று அவள் வாயால் சொல்லிக் கொண்டாலும் தன்னுடைய வீடு கிராமத்தில் இருக்கிறது என்று அவள் மனமார அறிவாள். எஜமானருடைய குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும் போது, என்னுடைய ஹரி மிகவும் சேட்டைக்காரன்; இவனுக்கு இனிப்பு என்றால் பிடிக்காது என்றெல்லாம் சொல்லிக் கொள்வாள். இவ்வாறெல்லாம் அவள் தன் வாயால் சொல்லிக் கொண்டாலும் ஹரி தன்னுடைய குழந்தை அல்ல, அவன் எஜமானருடைய குழந்தை என்பதை அவள் நன்கு அறிவாள். அது போலவே நமது சம்சார வாழ்க்கை, வீடு, வாசல் மக்கள் எல்லாம் ஈஸ்வரனுடையன என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

42

இறைவனிடம் ஆணைபெற்ற ஒருவன் ஞானம் மிகவும் பெற்றுள்ளவனாக இருக்கிறான். அவனிடம் இருக்கும் ஞானத்திற்கு எல்லையே இல்லை; அந்த ஞானம் அவனுக்கு ஈசுவரனிடமிருந்து வருகிறது; அது ஒருக்காலும் தீர்ந்து விடுவதில்லை; வந்து கொண்டே இருக்கும். நெல் அளக்கும் இடத்தைக் கவனித்திருக்கிறீர்களா? ஒருவன் நெல்லை அளந்து அளந்து போட்டுக் கொண்டே இருப்பான்; மற்றொருவன் நெற்குவியலைத் தள்ளிக் கொடுத்துக் கொண்டே

இருப்பான். அதே போல இறைவனது ஆணையைப் பெற்றவன், மக்களுக்கு எவ்வளவு போதிக்கிறானோ, அந்த அளவுக்கு ஈசுவரன் பின்னால் இருந்து கொண்டு ஞானக் குவியலைத் தள்ளிக் கொடுத்துக் கொண்டே இருக்கிறான்; அந்த ஞானம் ஒரு பொழுதும் தீர்ந்து விடுவதில்லை.

43

ஈசானர் மற்றும் சில பக்தர்களும் நின்று ராமகிருஷ்ணரை வழியனுப்பக் காத்திருந்தனர். அப்போது ஈசானரை நோக்கிப் பரமஹம்சர் மொழிந்தார்; நீ குடும்பத்தில் இரு; ஆனால் ஓர் எறும்பைப் போல் இரு; குடும்பத்தில் நித்தியமும் அநித்தியமும் கலந்து கிடக்கின்றன; அதாவது மணலும் சர்க்கரையும் கலந்தே கிடக்கின்றன. எறும்பு எடுத்துக் கொள்வது போலச் சர்க்கரையை மட்டும் எடுத்துக்கொள்; அன்னப் பறவை பாலை மட்டும் எடுத்துக் கொள்வது போல நீ பாலை மட்டும் எடுத்துக்கொள்; தண்ணீரை விலக்கிவிடு; சேற்றில் இருக்கும் மீனைப் போல் இரு; மீன் உடலை அசைத்துச் சேற்றை நீக்கி உடலைச் சுத்தமாக, பளபளப்பாக வைத்துக்கொள்கிறது. அதைப்போல இரு.

*(தொடரும்...)*

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 9

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

வடக்கே நாலந்தா பல்கலைக்கழகம் போலத் தெற்கே காஞ்சிபுரத்தின் சமயப் பொதுமையைப் போதித்த சிறப்பு - தமிழக வரலாற்றோடு பின்னிப் பிணைந்த ஒன்றாகும். அந்த வகையில் அந்தக் காலத்தில் மணிமேகலைக் காப்பியப் பெருமைக்கு இடமான காஞ்சிபுரம் பின்னாளில் சைவ வைணவ சமயங்களின் சமமான வளர்ச்சியால் புகழ் பெறுதற்குச் சின்னக் காஞ்சிபுரமும் பெரிய காஞ்சிபுரமும் எடுத்துக் காட்டுகளாக உள்ளன. அந்தத் தொடர் சிறப்பில் சின்னக் காஞ்சிபுர அத்திவரதர், கஜேந்திர வரதர், மற்றும் தீபப் பிரகாச வரதர் என முறையே மூவரும் கோயில் கொண்டிருக்கும்

அத்திகிரி, திருவட்டபுயகரம், திருத்தண்கா என்னும் - விண்ணகரங்களுக்கு அழைத்துச் சென்று மீனவர் திருவேளுக்கை என்னும் சின்னக் காஞ்சிப்பதியைத் தரிசிக்கச் செய்கிறார்.

அழகிய சிங்கர் என்னும் மூலத்தான நரசிம்ம மூர்த்தியின் கிழக்கு நோக்கிய திருக்கோலத்தில் தாயார் வேளுக்கை வல்லியுடன் அருள் பாலிப்பதைக் காணப் பக்தர்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என எண்ணுமாறு மீனவர் கீழ்க்கண்டவாறு பாடுகிறார்,

**முகுந்தனாம் நரசிங்கன் மூலவனாய் வீற்றிருக்கும்**
**வைகுந்தன் வேளுக்கை வல்லியுடன் அருள்பொழியும்**
**மைசுந்த மேனியான் மலர் ஏந்து நாபியினான்**
**வைகும்தம் சிந்தைக்குள் வந்தானை வணங்குமினே!**

இப்பாடலில் வைகுந்தம் என்ற சொற்பொருள் நயம், பாராட்டுக்குரியதாக உள்ளது. வைகுந்தம் என்பது நம் மனந்தான் என்கிறார் மீனவர், வைகும்தம் சிந்தைக்குள் வந்தானை வணங்குமின் - என்றதைப் புரட்சியாகக் கருதலாம், எங்கோ கண்ணுக்கெட்டாத வைகுந்தமான இடத்தை விட்டுவிட்டு, வணங்கும் பக்தர்களின் சிந்தனையில் வைகும் வாசனாகப்பரந்தாமன் அருள்பாலிக்கும் போது ஆன்மாவின் பிறப்பிறப்பான வாசனாமலம் அழிவதை எளிமையாகக் காட்டுகிறார் மீனவர்,

இங்ஙனம் காட்டுதற்குப் பேயாழ்வார், பாடிய பாசுரமே காரணமாக உள்ளது எனலாம். அதாவது, பரந்தாமன் ஆன்மாக்களை ஈடேற்றுதற்காகவே மற்ற மற்ற இடங்களில் தங்கியிருந்தாலும் அப்பரந்தாமன் ஏதோ காரியத்தின் பொருட்டு ஒரோவழி அந்த இடங்களை விட்டு நீங்கிப் பின் வந்து தங்குவானாம், ஆனால் இந்த வேளுக்கை என்னும் தலத்தை விட்டு எக்காரணம் கொண்டும் நீங்கவே மாட்டானாம் என்கிறார் பேயாழ்வார்.

**சிறந்த என் சிந்தையும் செங்கண் அரவும்**
**நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும் - உறைந்ததுவும்**
**வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே**
**தாம்கடவார் தண்துழா யார்.**

இந்த வேளுக்கை என்ற தலத்தை. வேளுக்கைப் பாடி என்பதாகக் கூறுவது சிந்திக்கத்தக்கதாகும். பாடி என்றால் பொதுவாக ஓர் ஊர் அல்லது இருப்பிடம் என்பதாகப் பொருள் தந்தாலும் அச்சொல் (பாடி) பாடிவீடு எனப் போர்த் தொடர்புடன் வீரர்கள் தங்கியிருக்கும் பாசறையைச் சிறப்பாகக் கருதச் செய்வதால் தன்னை வந்து சேவிக்கும் சேவாதிகளின் (பக்தர்களின்) வாசனா மலப்பகையை மாய்க்கவே வேளுக்கை எனும் தலத்தைப் பாசறையாக்கி அதை விட்டு நீங்காதவராக உள்ளார் என்ற பேயாழ்வாரின் கருத்தை நுட்பமாக உணர்ந்த காப்பியக் கவிஞர் மீனவர், வைகும்தம் சிந்தைக்குள் வந்தானை வணங்குமினே என்றார்.

இங்ஙனம் ஆன்மாவை ஈடேற்றும் விருப்பமே பரந்தாமனின் விளையாட்டென்பதால் அவ்விளையாட்டைச் செய்யும் விருப்பத்திற்குரிய இடமாகக் கொண்ட ஊரை வேளுக்கை என்பதாக ஆக்கிக் கொண்டான் என்பது கருத்து. வேள் என்றால் எல்லோரும் விரும்பத்தகுந்த மன்மதன் என்பது பொருள், அந்த வகையில் எல்லோரும் விரும்பத்தகுந்த ஆள் அழகிய சிங்கர் சந்நிதியாக இருக்கை கொண்டதால் வேள் இருக்கை – வேளுக்கை எனச் சுருங்கிய மருவுச் சொல்லானது எனலாம்.

வேள் என்ற சொல்லுடன் தொழிற்பெயர்க்குரிய உகரச் சாரியை மகர வேளு ஆகும், அந்த வேளுவின் இருக்கை வேளுக்கையானது என்பதாம், (வேள் + உ = வேளு. வேளு + இருக்கை = வேளுக்கை)

இப்படிப் பேயாழ்வாரோடு திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ள இவ்வேளுக்கை தத்துவார்த்தம் பொதிந்த தலமாக உள்ளதால் மீனவர்,

**முகுந்தனாம் நரசிங்கன் மூலவனாய் வீற்றிருக்கும் வேளுக்கை** – என்றார். அதாவது எம்பெருமான் அழகிய சிங்கராகிய முகுந்தன் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார். அதர்மம் எவ்வளவுக்கு எவ்வளவு ஆற்றல் கொண்டதாக விளங்கினாலும் அந்த அதர்மத்தை அழித்துத் தான் ஒன்றே தெய்வம் என்ற உலகளாவிய தத்துவம் இத்தலத்தில் (வேளுக்கையில்) நிலைநாட்ட நரசிங்கமாய் நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார் என்பதாம்.

அதாவது நரசிங்கம் அமர்ந்த கோலத்தில் இல்லாததோடு பகலிரவு சந்திக்கும் மாலையில் அதமனாகிய இரணியனை மேற்கு நோக்கி அழித்திருந்தாலும் அந்தத் தார்ப்பரியத்தின் இணையாகக் கிழக்கு நோக்கி நின்று சேவாதிகளுக்குச் சேவை தந்தருளும் இத்தலத்தின் தனித்த தத்துவார்த்த சிறப்பாவது தர்மசக்தி - அதர்மத்தை ஜீரணமாக்கி விடும் - என்ற ஞானத்தைப் போதிப்பதற்கு முகுந்தனாம் நரசிங்கன் மூலவராய்க் காட்சி தருகிறான் என்பது கருத்து.

இப்படியாகச் சத்திய தர்மத்திற்கு மாறுபட்டு நடக்கக் கூடியவர்களிடம் சிங்கமாகக் கர்ஜிக்கும் வேளுக்கை வியாபகனை வணங்கிய நம்மை மீனவர் திருநீரகம் என்னும் பெரிய காஞ்சிபுர உலகளந்த பெருமான் சன்னதியைத் தரிசிக்கச் செய்கிறார்.

ஐம்பூதப் பெரும் பொருளில் நீருக்குத்தான் உருவம் இல்லை என்பதால், மூலவர் இல்லாத திருத்தலமாக இந்தத் திருநீரகம் - செகதீஸ்வரர் என்ற உற்சவ மூர்த்தமே மூலவராயும் திகழும் சிறப்புடைய தலமாக உள்ளது.

தில்லையில் நடராசர் - உற்சவமூர்த்தியாவார், அவரே மூலவர் போல் உள்ளார், அதுபோல் இந்நீரகத்தில் பரந்தாமன் உற்சவராகக் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார். இதைத் தான் மீனவர் இத்தலத்தின் தத்துவமாகக் கூறுகையில்,

தலமில்லை மூலவர் தானுமில்லை ஆனாலும் சலமானான் ஊரகத்துச் சன்னதியான் நமக்கு என்றார், மேலும் உற்சவரான செகதீசுவரனுக்கேற்பத் தாயார் நிலமங்கை வல்லியாகப் பரந்தாமனோடு படர்ந்துள்ளாள் என்பதால் காப்பியக்கவிஞர் நிலமங்கை உடன் நின்ற நீரகத்தை வணங்குமினே எனக்காட்டுகிறார், திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டக மங்களா சாசனத்தில் நீரகத்தாய்! நிறைந்த கச்சி ஊரகத்தாய் எனப்பாடுகிறார்.

இத்திருநீரகத்தின் நீர்த்தத்துவம் அறிந்து கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும், பஞ்ச பூதங்களுள் நிலம் - அசையாதது, தீ - ஒளியானது, காற்று - உலக உயிர்களின் உயிர்ப்பானது, ஆகாயம் - வெளியானது. ஆனால் நீரோ நிலத் தொடர்பில் உள்ளும் புறம்புமாய் ஓடும், நிற்கும்,

அதாவது நிலத்தடி நீராய்க் கண்ணுக்குத் தெரியா தாயினும், கிணற்று நீராய், குளத்தில் ஏரியில் ஆற்றில் கடலில் வெளிப்படையாய்த் தெரியும் இயல்புடையது. மேலும், மழையால் தன்னைப் பெருக்கிக் கொள்ளும் இயல்புடையது, அதுபோல, செகதீசனாம் இத்திரு நீரகப் பரந்தாமனோ உலகக் கூட்டுப் பொருளாய், ஒன்றாய், வேறாய், உடனாய்ப் பரந்துள்ளான் என்பதோடு ஆன்மாக்கள் வந்து பொருந்தப் பொலியும் பெரும் பொருளாகவும் உள்ளான் என்பதனால் நீர் வண்ணனாய்ப் பரந்தாமன் உள்ளானாம் என மீனவர் சலமானான் என்றும் நீர்வண்ணன் நீயானாய் என்றும் நமக்குக் கண்டு காட்டுகிறார்.

நீரின்றி அமையாது உலகு(20) என்ற குறள்படிக் குறள் வடிவாய் (குள்ளவடிவாய்) வாமன அவதாரம் எடுத்த திருமால், தண்ணீராகவே கடவுள் உள்ளதன் தத்துவத்தை இந்தத் திரு நீரகத்தலம் நிலைநாட்டுகிறது, இதனால் சகல ஆன்மாக்களுடனும் எவ்வித ஏற்றத் தாழ்வின்றித் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டு பொதுமையாக வியாபகமாய் விளங்குவதை உருவமில்லா உருவமாய் வீற்றிருக்கும் இப்பரந்தாமனை விட்டுப் பிரிய மனம் இல்லாத பக்தர் கூட்டத்தைத் திருப்பாடகம் என்ற பெரிய காஞ்சிபுர விண்ணகரத்திற்கு மீனவர் அழைத்துச் சென்று அங்குள்ள பாண்டவ தூதனாம் பரந்தாமனைச் சேவிக்கச் செய்கிறார்.

தாயார் ருக்மணி - சத்திய பாமா சமேதராக மூலவராம் பாண்டவதூதர் கிழக்கு நோக்கிய திருக்கோலம் சாதிக்கின்றார், பாண்டவ தூதர் என்றதே பெரும் தத்துவத்தை உயர்த்துவதாகும், தருமத்தை நிலைநாட்டி அதர்மத்தை அழிப்பதற்காகத் தரும தேவதையின் பொருட்டு, அதர்ம கலி புருடனாம் துரியனிடம் தூது போய்த் தரும யுத்தத்தைத் தொடங்கி வெற்றி கண்ட தத்துவக் குறியீடாகப் பாண்டவதூதராய்ச் சேவை சாதிக்கின்றார் பரந்தாமன், இதற்கான பெருத்த அடையாளமாக உள்ள தூது என்ற சொல்லே அதி அற்புதமான சொல், தூ என்ற நெடில் எழுத்து, பகை உணர்வுக்கான மனவிகாரத்தை உணர்த்தும் குறிப்பு எழுத்து, அது நெடிலாகிய ஓரெழுத்து ஒரு மொழி எனப்படும், தூரம் என்றதன் சுருங்கிய எழுத்தே தூ.

அந்த நெடிலுடன் அதே தகர வரிசைக்குறில் எழுத்தான து - சேரத்தூது என்ற முழுச் சொல் ஆகிறது, பகையாம், தூர தூரமாக இருந்த மன உணர்வைச் சமாதானப்படுத்திச் சாந்தமடையச் செய்விப்பதால் ஏற்படும் மன நெருக்கத்தைப் பொருள் அளவில் காட்டுவதே இந்த நெடிலும் குறிலுமாலும் ஆன தூது ஆகும்.

இந்தத் தூது கெட்ட போரிடும் உலகை வேரொடு சாய்ப்பதால் மனிதன் வாழப் பிறந்தவனேயன்றிப் போரிட்டு மாளப் பிறந்தவன் அன்று என்ற தத்துவத்தைத் தருவதே தூது எனும் சொல்வடிவும் சொற்பொருளும் ஆகும். இக்கோயில் கல்வெட்டு பரந்தாமனைத் தூதஹரி என்கிறது. இதற்கேற்பவே பாடகம் என்று தலத்தின் பெயர் அமைந்துள்ளது, பாடு + அகம் = பாடகம், பாடு என்றால் பெருமை, தூது சென்ற பெருமையை உடைய பரந்தாமன் தங்கிய ஊரே பாடகம்.

மனித வாழ்க்கையில் போர்க்குணம் நீங்கி வாழச் செய்யும் பெருமையைப் பலரும் அறியச் செய்யும் விதமாகவே இப்பாடகத்தை, 1. பூதத்தாழ்வார், 2. பேயாழ்வார், 3. திருமங்கை மன்னர், 4. திருமழிசையார் என நால்வரும் மங்களாசாசனம் செய்துள்ளனர், இந்த உண்மையைக் குறிக்கவே மீனவர்,

**பாண்டவர்தம் தூதன்எனப் பன்னும்உயர் திருநாமம்**
**பூண்டாரை வணங்குமின்**

என்றார். மேலும் உருக்குமணி பாமாதான் உடனிருக்க உருக்காட்டி வரம் தரும் உத்தமனை வணங்குமினே - என்கிறார்.

கச்சி நகருள் நச்சிப் பாடகத்துள் எல்லாவுலகும் வணங்க இருந்த அம்மான் - என்று திருமங்கையாழ்வார் பாடக பரந்தாமனைத் தொழுகிறார்.

நன்றிருந்து யோகநீதி நண்ணுவார்கள் சிந்தையுள், சென்றிருந்து தீவினைகள் தீர்த்த தேவதேவனே, பாடகத்து இருந்தது என்ன நீர்மை? எனச் சேவிக்கின்றார் திருமழிசையார். இவ்வாறே பூம்பாடகத்துள் இருந்தானை ஏத்து நெஞ்சே! எனப் பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் பாடகத்தை வணங்குகின்றனர். இங்ஙனம் பாடகம் பார்த்ததோடு கச்சி ஏகம்பர் பெருங்கோயிலுக்குள் கோயிலாகச் சன்னிதி கொண்டிருக்கும் திருநிலாத் திங்கள் துண்டம் என்னும் விண்ணகரம் தொழ மீனவர் நம்மைக் கூட்டிச் செல்கிறார்.

சந்திர மௌளி எனச் சிவனுக்கோர் சிறப்புப்பெயர் போல் சந்திர சூடன் என்ற பெயருடன் பரந்தாமன் மேற்கு நோக்கிய திருக்கோலத்தில் சேவை சாதிப்பதை மீனவர் திருநிலா நல் திங்கள் துண்டத்தான் திருவடியை ஒருமுறை வணங்கினால் உத்தமனின் அருள் பெறலாம் எனப் பலா பலன் கூறிச் சேவாதிகளாகிய நம்மை வணங்கச் செய்கிறார்.

இப்பரந்தாமனின் பெருமாட்டியோ நேர் ஒருவர் இல்லாத வல்லி என்ற நீள்நாமம் உடைய பெருந்தாயாராவார். இந்நீள் நாமத்திற்குத் தன்னேரில்லாத சவுந்தர வல்லி என்பது கருத்தாகும்.

சந்திரனைத் தலையில் சூடியுள்ள ஆதிசிவமும் நானே எனக் கூறும் பொருத்தத்தில் ஏகம்பர் கோயிலுக்குள் ஏக நாயகனாக இந்நிலாத் திங்கள் துண்டத்தான் சமத்துவ பக்திநெறி காட்டுபவனாகச் சேவை சாதிக்கின்றார். திருமங்கையாழ்வாரின் மங்களாசாசன நினைப்போடே திருஊரகம் என்னும் பெரிய காஞ்சிபுர விண்ணகரத்திற்கு மீனவர் அழைக்கச் செல்லும் நாம், அமுதவல்லித் தாயாருடன் திருஊரக உலகளந்த பெருமானைச் சேவிக்கின்றோம், மேற்கு நோக்கிய மூலவருக்கு உற்சவ மூர்த்தமாகப் பேரகத்தான் சன்னதியையும் சேவிக்கின்றோம்.

உயிர்களும் உயிரற்றனவுமாக உள்ள உலகம் எல்லாம் தன் காலடிக்கீழேதான் எனத் தத்துவம் உணர்த்த திரிவிக்கிரமனாய் உலகளந்த சேவையை வழங்குகிறான் பரந்தாமன், இதன் சுருக்கத் தத்துவம் யாதெனில் உலகத்தை ஒரு குடும்பமாக்கி. ஓர் ஊராக்கி அதன் அகத்தே (உள்ளே) தான் இருப்பதாய்த் தன் பரத்துவத்தைக் காட்டுவதாகும்.

இதைத்தான் மீனவர் ஈரடியால் மண்ணளந்தான் இருவிரலைக் காட்டி வைத்தான்; ஓரடியால் உலகளந்தான் ஒரு விரலைக் காட்டி வைத்தான் எனப் பரந்த உலகைத் தன் பரத்துவத்தால் சுருக்கிக் காட்டிய விதத்தைச் சிலாகித்தார்.

இவ்வூரகத்திற்குத் தனியானதொரு சிறப்பு உண்டு; உலகளந்த வைபவம் திருக்கோவலூரில் நடந்தாலும் பரந்தாமன் பரந்து பட்டவன்

என்பதை உணர்த்தவே இத்திரு ஊரகத்தும் உலகளந்தவனாகவே தோற்றம் தருகிறான். இந்த நுட்பத்தை இவ்வூரகத் திவ்ய தேசத்துடன் கூடிய மூன்று திவ்ய தேசங்களும் அடங்கிய ஒரேவளாக விண்ணகரங்களாகச் சேவிக்கச் செய்யும் பரந்தாமனின் பரத்துவமாய்ச் சேவை சாதிப்பது தனிச்சிறப்புடையதாகும்.

அதாவது இத்திரு ஊரகத்துள்ளேயே 1. திருக்காரகம், 2. திருக்கார்வானம், 3. திருநீரகம் என்னும் மூன்று திவ்ய தேசங்களும் ஒருங்கிணைந்து காணப்படுவது பெருஞ்சிறப்பாகும். இதைத்தான் நுட்பமாக உணர்த்துகிறார் மீனவர்,

**ஊரகத்தில் கார்வானம் உடையவனாய் நீரகமும்**
**காரகமும் தானுடைய கச்சி எனும் பதியுடையான்,**

என்கிறார். திருமழிசையாரும் திருமங்கையாரும் மங்களாசாசனம் பாடியருளிய இத்திரு ஊரகத்தைத் தரிசனம் செய்துவித்த மீனவர் - அடுத்து சின்னக்காஞ்சிபுரத் திருவெஃகா தலத்தைப் பற்றிக் கூறி அழைத்துச் செல்கிறார்.

வெஃகுதல் என்றால் விரும்புதல் என்பது கருத்து. இந்தத் தலத்தை எப்போது காண்போம் என்ற வகையில் விருப்பத்தைத் தூண்டி விட்டபடி மீனவர் பக்தர்கள் அனைவருக்கும் திருவெஃகாவில் கோமளவல்லியுடன் வீற்றிருக்கும் சொன்ன வண்ணம் செய்த பெருமாள் சந்நிதியைக் காட்டித் தரிசிக்கச் செய்தார், பக்தர்கள் - சொன்ன வண்ணம் கடவுளர்கள் கேட்டுச் செய்து அருள் பாலிப்பதால் சொன்னவாறருளும் கடவுளாக விநாயகரையும் முருகனையும் சைவமும் கூறும்.

இந்தத் திருவெஃகாவில் பரந்தாமன் - மேற்கு நோக்கிய புஜங்க சயனத்துடன் யதோத்தகாரி எனப்படும் சொன்ன வண்ணம் செய்த பெருமானாகக் காட்சியளிக்கிறார்.

கடவுள் நம்பிக்கையுடன் பக்தி செலுத்தும் அடியார்களின் சொன்ன சொற்களின்படியே பரந்தாமன் நடக்கக் கூடியவர் என்றதற்கான காட்சிக் கடவுளாகக் காட்சி தருதற்கு ஓர் அரிய வரலாறுண்டு,

திருமழிசையாழ்வாரின் சீடர் கணிகண்ணன் என்பார் பரந்தாமனையே பக்திப் பரவசமாகப் பாடி வந்தார், அந்நாளில் தொண்டை மண்டலத்தை ஆண்ட மன்னன் தன்னைப் புகழ்ந்து பாடக் கணிகண்ணனாம் புலவரை வேண்டிக்கொள்ள, அதனை மறுத்த புலவரை நாடு கடத்த உத்தரவிட்டார், இதனால் மனம் வருந்திய கணிகண்ணர் வெஃகாவின் பரந்தாமனிடம்,

**கணிகண்ணன் போகின்றான் காமருசீர் கச்சி**
**மணிவண்ணா நீகிடக்க வேண்டா - துணிவுடைய**
**செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயும் நின்**
**பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.**

எனப்பாடி விண்ணப்பித்தார். பரந்தாமனும் புலவர் சொன்ன வண்ணம் பாம்புப் படுக்கையைச் சுருட்டிக் கொண்டு புலவருக்குப் பின்னால் புறப்பட்டதால் திருவெஃகா திருத்தலம் திருநீங்கிய வெற்றுத் தலமானது.

இதனை அறிந்த மன்னனுக்கு வைணவோத்தம சான்றோர்கள் அறிவுரை கூற, அதனால் ஊரை விட்டுப் போன கணிகண்ணனை அழைத்து வந்தபோது அப்புலவர் மீண்டும் பரந்தாமனிடம் கணிகண்ணன் போக் கொழிந்தான் நீயும் உன் பைந்நாகப் பாய் விரித்துக்கொள் என வேண்டியபடி வெஃகாவில் மீண்டு வந்து பரந்தாமன் வீற்றிருந்தானாம், இதனால் பைந்தமிழில் பாடுவதால் சொன்னவண்ணம் செய்த யதோத்காரியாக (எடுபிடிவேலை செய்பவனாக) இருந்த பரந்தாமனின் எளிமை (சௌலப்யம்) காட்டிய திருத்தலமே இந்த வெஃகா என மீனவரும்,

**பத்தனாம் திருமழிசைப் பாட்டுக்கு நாகப்பாய்**
**அத்தினமே சுருட்டி அவர் வேண்டப் பின் விரித்த**
**முத்தன் திரு நெடுமால் முன்னிற்கும் திருவெஃகா**
**இத்தினமே நீர் பணிந்தால் ஏற்றங்கள் பெறலாமே.**

எனப் பெருவிருப்பைத் தூண்டிப் பாடியதால் அத்தலத்தைப் பணிந்த பக்தர்கள் - திருமழிசையார், திருமங்கை மன்னர், பொய்கையார், பேயார், நம்மாழ்வார்களின் மங்களா சாசன வரிகளை மீனவர் நினைவூட்ட அத்தலத்தை விட்டுப் பிரிய மனமில்லாமல் இருந்தனர்.

மேலும் பரந்தாமன் வேகவதி ஆற்றின் வெள்ள வேகத்தைத் தடுக்க குறுக்கே சயனம் கொண்டதால் வேகவதி அணை எனும் வழக்கு வேகணை என்பதாகச் சுருங்கி வெஃகணையானது. அதுவே வெஃகா என மருவிற்று என்றும் மேலும் இத்திருத்தலத்தை விட்டுப் பிரியா மனநிலையிலேயே மீனவர் பக்தர்களைப் பால் குடிக்கும் கன்றைப் பிரிப்பது போல் பிரித்த வண்ணம் பெரிய காஞ்சிபுரத்தின் ஊரகம் என்னும் திவ்ய தேசத்து *உள்ளே உள்ள திருக்காரகம்* – பணியச் செய்வதை அடுத்துக் காண்போமாக!

***(தொடரும்...)***

**ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்**

**10. திருப்புள்ளம் பூதங்குடி**

**(அழ.மெய்யம்மை)**

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்யதேசங்களுள் பத்தாவது திவ்யதேசம், திருப்புள்ளம் பூதங்குடி, சோழநாட்டுத் திருப்பதிகளுள், இது பத்தாவது திருத்தலமாகும். இத்தலம் சுவாமிமலையிலிருந்து திருவைகாவூர் செல்லும் சாலையில் 4 கி.மீ தொலைவில் உள்ளது. ஸ்ரீரங்கத்தைப் போலவே இத்தலமும் காவேரி கொள்ளிடத்திற்கு மத்தியில் உள்ளது.

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற போது, அவனை எதிர்த்துப் போரிட்ட சடாயு என்னும் பறவை, இராவணன் வாளினால் துண்டிக்கப்பட்டு ராமா, ராமா என்ற சத்தத்துடன் குற்றுயிருங்குலையுயிருமாய்க் கிடந்தது. அப்போது, அவ்வழியே வந்த இராமலட்சுமணர்கள் இவ்வபயக் குரல் கேட்டு அருகில் சென்றுபார்த்தனர். சீதையை இராவணன் கவர்ந்து சென்ற விவரத்தைத் தெரிவித்துவிட்டு, சடாயு உயிர் துறந்தது. சடாயுவாகிய பறவைக்கு மோட்சமளித்து விட்டு, இராமன் அவருக்கு இறுதிக்கடன் செய்ததலமே இத்தலம் ஆகும். சடாயுவாகிய புள்ளிற்கு மோட்சம் கொடுத்து அதன் பூத உடலுக்குச் செய்ய வேண்டிய கடன்களைச் செய்தமையால், இத்தலம் புள்ளம் பூதங்குடியாயிற்று. இங்குள்ள

மூலவர் : சக்கரவர்த்தித் திருமகன்

உற்சவர் : வல்வில் இராமன்

தாயார் : பொற்றாமரையாள் என்ற ஹேமாம்புஜ வல்லி

தீர்த்தம் : சடாயுத் தீர்த்தம், கிருத்ரதீர்த்தம்

தலவிருட்சம் : புன்னை மரம்

விமானம் : சோபன விமானம்

கோலம் : கிழக்கு நோக்கிய புஜங்கசயனக் கோலம்

க்ருத்ரராஜன் என்னும் மன்னன் எம்பெருமானை நோக்கிக் கடும் தவம் செய்தான். வல்வில் இராமனாக, புஜங்கசயனத்தில் பெருமானைத் தரிசித்தான். எனவே இங்குள்ள ஒரு தீர்த்தம் க்ருத்ரதீர்த்தம் ஆயிற்று. பெருமாளின் நவக்கிரக தலங்களில், இது புதன் தலமாகும். பதவி உயர்வு விரும்புபவர்கள் இக்கோயிலில் உள்ளயோக நரசிம்மரை வழிபடுதல் நலம்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ் நாவலர் கவிஞர்கோ. நா.மீனவனார் திருப்புள்ளம் பூதங்குடி குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. வேலை கிடைக்காமல் கஷ்டப்படுபவர்களும், கல்வியில் முன்னேற விரும்புபவர்களும் இங்கு வந்து வேண்டிக் கொள்வர். வேண்டுதல் நிறைவேறிய பக்தர்கள், நறுமணமுள்ள மலர்களை வாங்கி வந்து சமர்ப்பிப்பார்கள். அம்மலர்களைக் கொண்டு, பூச்சட்டை செய்து சுவாமியை அலங்கரிப்பர். அதனால், இராமபிரான் மனம் குளிர்ந்து, நம் வாழ்க்கையில் மணம் வீசச் செய்வார் என, பக்தர்களின் மனதில் நம்பிக்கையை ஏற்படுத்தும் புள்ளம்பூதங்குடியானின் சேவடிகளை வணங்கச் சொல்லும் முதற் பாடல் :

***சிறகசைக்கும் வண்டினங்கள் சேர்ந்திசைக்கும் இனியகுடி***
***பறவையினம் வான்பறக்கப் பச்சைவயல் செழித்திருக்கும்***
***நறியமலர்த் திருப்புள்ளம் பூதங் குடிநயந்தான்***
***செறிதுளவத் தார்மார்பன் சேவடிகள் வணங்குமினே.***

2. எப்போதும் உடனிருக்கும் சீதாப்பிராட்டி உடன் இல்லாததால், கையில் தாம் வைத்திருக்கும் கோதண்ட வில்லையே துணையாகக் கொண்டுதன் ஏக்கத்தைப் போக்கிக் கொண்டதால், இப்பெருமான் வல்வில் இராமன் ஆனார். இராமன் சடாயுவுக்குத் தீக்கடன், நீர்க்கடன் செய்ய நினைக்கும் போது, அதற்குத் துணையாக அருகில் நிற்கத் தேவியில்லையே என மானசீகமாக நினைக்கின்றார். அப்போது,

சீதையைப் பிரிந்த இராமனுக்கு உதவ வேண்டி, பூமிப்பிராட்டியே பொற்றாமரையில் வந்து நின்று மானசீகமாகக் காட்சியளிக்க, இராமன் சடாயுவுக்குச் செய்ய வேண்டிய கடன்களைப் புன்னை மரத்தடியில் அமர்ந்து செய்து முடித்தார். அதனால் இங்கு தாயார் பொற்றாமரையாள் என அழைக்கப்டுகிறார். அரவணையில் உறங்குகின்ற திருப்புள்ளம்பதி யானைப் போற்றச் சொல்லும் இரண்டாம் பாடல் :

*வல்வில் இராமனுடன் வயங்கும்பொற் றாமரையாள்*
*அலைமருவு கடலுறங்கும் அரவணையான் அக்கடல்வாய்*
*ஒலிசங்கம் திருவாழி உடனாகக் கையேந்திப்*
*பொலியுமுயர் திருப்புள்ளம் பதியானைப் போற்றுதுமே.*

3. சூரியனின் மகன் சடாயு. இவர்தசரதச் சக்கரவர்த்திக்குப் பல உதவிகள் செய்து உயிர்த் தோழராயிருந்தார். இராம இலக்குமணர்கள் இவரைத் தமது பெரிய தந்தையாகவே பாவித்து வந்தனர். இராமர், தகப்பனாருக்குச் சிரமபரிஹாரம் பண்ணப் பொறாமையால், சடாயுவுக்கு அதைச் செய்து அக்குறையைப் போக்கிக் கொண்டார். இக் கழுகரசனாகிய சடாயுவைப் பற்றி ஞானசம்பந்தர் தனது தேவாரத்தில், மறங்கொண்ட இராவணனைப் புறங்கொண்ட சடாயு என்கிறார். அச்சடாயுவின் பூதவுடல் இருக்கின்ற இப்புள்ளம் பூதங்குடியினைச் சேவிக்கச் சொல்லும் மூன்றாம் பாடல் :

*மறங்கொண்ட இராவணனார் மதிகெட்டுச் சீதையினைச்*
*சிறையெடுத்த போதன்று சிலிர்த்தெழுந்த கழுகரசை*
*அறுத்துச் சிறகொடித்த அந்நாளில் பூதவுடல்*
*இறுபுள்ளம் பூதங் குடியிதனைச் சேவியுமே.*

4. பொதுவாக இராமர் நின்ற கோலத்தில் தான் அருள்பாலிப்பார். ஆனால் திருப்புள்ளம் பூதங்குடியின் கருவறையில் ஸ்ரீராமர் ஆதிசேஷன் மீதுசயனத் திருக்கோலத்தில் சோபன விமானத்தின் கீழ் காட்சி தருகிறார். அவருடையநாபிக் கமலத்தில் பிரம்மா, திருவடியில் இலட்சுமணர், ஆஞ்சநேயர், சடாயு ஆகியோர் காட்சி தருகின்றனர். இராமன் சடாயுவிற்குச் சிரமபரிகாரம் செய்துவிட்டு இங்கு பள்ளி கொண்டார். திருமங்கையாழ்வார் இங்கு வந்த போது யாரோ இரண்டு கைகளையுடைய பிற தெய்வம் என்றெண்ணிக் கவனியாது செல்ல,

திடீரென்று ஒரு பெரிய ஜோதி வெள்ளம் தெரிந்தது. திரும்பிப் பார்த்த திருமங்கையாழ்வார்க்கு நான்கு கரங்களுடன் சங்கு சக்ரதாரியாக ஸ்ரீராமன்காட்சி கொடுத்தார். அதனால், இங்கிருக்கக் கூடிய உற்சவர் ஸ்ரீ வல்வில் இராமன் சங்கு சக்கரம் ஏந்தியவராக நான்கு திருக்கரங்களுடன் காட்சிதருகிறார். அப்போது, திருமங்கையாழ்வார், அறிய வேண்டியதை அறியாமல் சென்று விட்டேன் என்று கூறும் வகையில்

***அறிவதறியான் அனைத்துலகும் உடையான் என்னையாளுடையான்***
***குறியமாணியுருவாய கூத்தன் மன்னி அமருமிடம்***
***நறியமலர்மேல் சுரும்பார்க்க எழிலார்மஞ்ஞைநடமாட***
***பொறிகொள் சிறைவண்டிசைபாடும் புள்ளம் பூதங்குடிதானே***

என்ற பாசுரத்தில் தொடங்கிப் பத்துப் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்தார். திருமங்கையாழ்வாரின் பாசுரங்களில் தினம் மகிழும் மாலவனின் அடிக்கமலத்தைப் போற்றச் சொல்லும் நான்காம் பாடல் :

***ஒருமங்கை மார்புடையான் ஓராழிக் கையுடையான்***
***புரிசங்கம் மறுகையான் புகலிடமாம் அடியுடையான்***
***திருமங்கை பாசுரத்தில் தினம்களிக்கும் மனமுடையான்***
***அருள்செங்கை மாலவனின் அடிக்கமலம் போற்றுதுமே.***

5. வைணவ சம்பிரதாயத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இரண்டு பூதபுரிகள் உண்டு. ஒன்று திருப்புட்குழி. மற்றொன்று புள்ளம் பூதங்குடி. திருப்புட்குழியில் சடாயுவுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்த இராமபிரான், புள்ளம் பூதங்குடியில் சடாயுவுக்குத் தர்ப்பணம் கொடுத்ததாகவும் சொல்கின்றனர். அதனால் பித்ரு வழிபாட்டுக்கு இத்தலம் மிகவும் விசேஷமாகும். முன்னோர்களுக்குச் செய்ய வேண்டிய தர்ப்பணங்களைக் கொடுக்கத் தவறுவோர், இத்தலத்திற்கு வந்து தர்ப்பணம் கொடுப்பதன் மூலம் பித்ருசாபத்திலிருந்து நிவர்த்தி பெறலாம். சடாயுவுக்குத் தர்ப்பணம் கொடுத்ததுடன், இத்தலத்தில் மோட்சமும் அருளினார். புள்ளம் பூதங்குடியிலுள்ள வில்கொண்ட இராமன்தான் இராமாயணம் காட்டும் இராமனாவார். அத்தகைய புள்ளம் பூதங்குடியில் வீற்றிருக்கும் அழகனைப் பாடச்சொல்லும் ஐந்தாம் பாடல் :

*புள்ளரையன் பூதவுடல் புகழ்சால் பரமபதம்*
*கொள்ளுமிடம் இதுவென்று கும்பிட்டுப் போற்றுகிறோம்*
*புள்ளம்பூ தங்குடியான் புகழ்சுமந்த பொற்புடையான்*
*அள்ளற் பழனவயல் அழகனைநாம் பாடுதுமே.*

திருமங்கையாழ்வார் தனது பாசுரங்களில் இராமாயணக் கதையை நினைவு கூர்கிறார். இராவணன், இராமனின் வில்லாற்றலை எவ்வாறு வியந்து பேசுகிறார், பாருங்கள்.

இராமன் வில்லிலிருந்து புறப்பட்டு வரும் அம்புகள் நான்கு திசைகளில், எந்தத் திசையிலிருந்து வருகின்றன என்பதை என்னால் அறிய முடியவில்லை. இந்த நான்கு திசைகளில் இடையில் இருக்கும் கோணங்களிலிருந்து வருகின்றனவா, உலகைக் கிழித்துக் கொண்டு வருகின்றனவா, விண்ணிலிருந்து பொழிகின்றனவா என்பதும் புரியவில்லை. மனிதனாகிய இராமன் பிடித்திருந்த வலியவில் அவன் இடக்கையில் இருந்ததா அல்லது வலக்கையில் இருந்ததா என்பதை அப்போது என்னால் உணர முடியவில்லை. இப்போது அதனை நினைத்துப் பார்க்கிறேன், தெரியவில்லை என இராமனின் வில்லாற்றலை வியந்து பேசுகிறான் இராவணன்.

மனிதன் வல்வில்
இடத்ததோ? வலத்ததோ? என்று
உணர்ந்திலேன் யானும் இன்னும்

என்பது இராவணன் கூற்றில் வைத்துக்கம்பர் தரும் வாக்குமூலம். இராமன் வில்லை இராவணன் கூற்றில் வைத்துக் கம்பர் மட்டுமா பேசுகிறார்! இல்லை, திருமங்கையாழ்வாரும் பேசுகிறார்.

கோவர்த்தனகிரியால் பெருமழையைத் தடுத்தவன், வலிமையான வாளேந்திய இராவணனுடைய திரண்ட இருபது தோள்களையும் அறுத்த, பலமுள்ள கோதண்டத்தைத் தரித்த ஸ்ரீராமன் எழுந்தருளியிருக்குமிடம், சிறந்த வேலைப்பாடுகள் அமைந்த மதில்களாலும், குன்றுகளாலும், அழகிய வீடுகளாலும், மாளிகைகளாலும், மண்டபங்களாலும் எழிலோடு திகழும் புள்ளம் பூதங்குடிதானே எனத் திருப்புள்ளம் பூதங்குடியில் எழுந்தருளியிருக்கும் பெருமாளை வல்வில் இராமன் என அழைக்கும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*வெற்பால் மாரி பழுதாக்கி விறல்வா ளரக்கர் தலைவன்தன்
வற்பார் திரள்தோள் ஐந்நான்கும் துணித்த வல்வில் இராமனிடம்
கற்பார் புரிசை செய்குன்றம் கவினார் கூடம் மாளிகைகள்
பொற்பார் மாடம் எழிலாரும் புள்ளம் பூதங் குடிதானே.*

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### ஆள்வினை உடைமை

(வினையை ஆளும் முயற்சி உடையவனாதல்)

**1. அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.**

அருமை உடைத்து என்று - இவ்வினை செய்தற்கு அரியது என்று; அசாவாமை வேண்டும் - தளர்ச்சி அடையாமை வேண்டும்; பெருமை - அவ்வினை செய்தற்கேற்ற பெருமையை; முயற்சிதரும் - முயற்சி தரும்.

ஒருவினை செய்தற்கு அரியது என்று தளர்ச்சி அடையக் கூடாது; அவ்வினை செய்தற்கேற்ற பெருமையைத் தனது முயற்சி தரும்.

**2. வினைக்கண் வினை கெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.**

வினைக்கண் - செய்யப்படும் வினையின்கண்; வினைகெடல் - செயல்படாது தவிர்தல்; ஓம்பல் - நீக்கிவிட வேண்டும்; வினைக்குறை தீர்ந்தாரின் - வினையின் குறையைச் செய்யாது விட்டவரை; தீர்ந்தன்று உலகு - உலகம் விட்டது.

செய்யப்படும் வினையின்கண் செயல்படாது தவிர்தல் கூடாது; அவ்வாறு செய்யாது விட்ட வரை உலகம் விட்டுவிடும்.

**3. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.**

தாளாண்மை என்னும் - முயற்சி உடைமை என்னும்; தகைமைக்கண் - உயர்குணத்தில்; தங்கிற்றே - நிலைபெறும்; வேளாண்மை என்னும் செருக்கு - ஒப்புரவாளன் என்னும் உயர்வு.

முயற்சி உடைமை என்னும் உயர்குணத்தில், ஒப்புரவு செய்தல் என்னும் உயர்வு நிலைபெறும்.

**4. தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.**

தாளாண்மை இல்லாதான் - முயற்சி இல்லாதவனுடைய; வேளாண்மை - ஒப்புரவு; பேடிகை வாளாண்மை போல - பேடியின்கை வாளை ஆளுவது போல; கெடும் - இல்லையாகும்.

முயற்சி இல்லாதவனுடைய ஒப்புரவு பேடியின் கை, வாளை ஆளுவது போலப் பயனில்லையாகும்.

**5. இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்து ஊன்றும் தூண்.**

இன்பம் விழையான் - இன்பத்தை விரும்பாதவன்; வினைவிழைவான் - வினை செய்தலையே விரும்புகிறவன்; தன்கேளிர் துன்பம் - தன் சுற்றத்தாரின் துன்பத்தை; துடைத்து ஊன்றும் தூண் - நீக்கிச் சுற்றத்தைத் தாங்கும் தூண் ஆவான்.

இன்பத்தை விரும்பாமல் வினை செய்தலையே விரும்புகிறவன் தன் சுற்றத்தாரின் துன்பத்தை நீக்கி அவரைத் தாங்கும் தூண் ஆவான்.

**6. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.**

முயற்சி திருவினை ஆக்கும் - முயற்சி உடைமை செல்வத்தை வளர்க்கும்; முயற்றின்மை - முயற்சி இல்லாமை; இன்மை புகுத்தி விடும் - வறுமையைச் சேர்த்து விடும்.

முயற்சி உடைமை செல்வத்தை வளர்க்கும்; முயற்சி இல்லாமை வறுமையைச் சேர்த்துவிடும்.

**7. மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்.**

மடியுளாள் மாமுகடி என்ப - திருமகளின் மூத்தவளாகிய வறுமை ஒருவனின் சோம்பலில் தங்கும் என்று சொல்லுவர்; மடியிலான் - சோம்பலில்லாதவன்; தாளுளாள் - முயற்சியில் இருப்பாள்; தாமரையினாள் - தாமரையில் வீற்றிருக்கும் திருமகள்.

ஒருவனுடைய சோம்பலில் வறுமை என்பது தங்கும்; சோம்பல் இல்லாதவனின் முயற்சியில் திருமகள் தங்குவாள்.

**8. பொறிஇன்மை யார்க்கும் பழிஅன்று அறிவுஅறிந்து**
**ஆள்வினை இன்மை பழி.**

பொறி இன்மை - (புலன் உணரும் பொறி) வினை செய்யப் பயன்படும் கருவி இல்லாதிருப்பது; யார்க்கும் பழி அன்று - எவருக்கும் குற்றம் ஆகாது; அறிவு அறிந்து ஆள்வினை - அறிவினால் அறிந்து வினைசெய்யும் முயற்சி; இன்மை பழி - இல்லாதிருப்பது பழியாகும்.

வினை செய்யப் பயன்படும் கருவி (புலன் உணரும் பொறி) இல்லாதிருப்பது எவருக்கும் குற்றம் ஆகாது; அறிவினால் அறிந்து வினைசெய்யும் முயற்சி இல்லாதிருப்பது குற்றம் ஆகும்.

**9. தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும்.**

தெய்வத்தான் ஆகாது எனினும் - வினையின்பயன் தெய்வ அருளால் கிடைக்காது என்றாலும்; முயற்சி - முயற்சி உடைமை; தன்மெய்வருத்த - அது சார்ந்த உடம்பினை வருத்தினால்; கூலி தரும்- பயன் கிடைக்கும்.

தெய்வ அருளால் வினையின் பயன் கிடைக்காது என்றாலும் முயற்சி உடைமையால் அது சார்ந்த உடம்பினை வருத்தினால் பயன் கிடைக்கும்.

**10. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவு இன்றித்**
**தாழாது உஞற்று பவர்.**

ஊழையும் உப்பக்கம் காண்பர் - ஊழ்வினையையும் புறம் காண்பர்; உலைவு இன்றி - கலங்காமல்; தாழாது - இடைவிடாது; உஞற்றுபவர் - முயல்கின்றவர்.

கலக்கம் இல்லாமல் இடைவிடாது முயல்கின்றவர் ஊழ்வினையையும் புறம் காண்பர்.

## இடுக்கண் அழியாமை

(வினையின் கண் துன்பம் வந்தபோது மனம் கலங்காமை)

**1. இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்தூர்வது அஃதொப்பது இல்.**

இடுக்கண் வருங்கால் - வினையின் கண் துன்பம் வரும்போது; நகுக - மகிழ்க; அதனை - அத்துன்பத்தினை; அடுத்து - கெடுத்து; ஊர்வது - முன்னேறச் செய்வது; அஃது ஒப்பதுஇல் - அந்த மகிழ்ச்சியினைப் போன்றது வேறு இல்லை.

வினையின் கண் துன்பம் வரும்போது மகிழ்தல் வேண்டும். ஏற்பட்ட துன்பத்தினைக் கெடுத்து முன்னேறச் செய்வதில் அந்த மகிழ்ச்சியினைப் போன்றது வேறில்லை.

வருங்கால் - வினை எச்சம்.

**2. வெள்ளத்து அனைய இடும்பை அறிவுடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும்.**

வெள்ளத்து அனைய இடும்பை - வெள்ளம் போல வரும் துன்பம்; அறிவுடையான் - அதனை வெல்லும் வழியை அறியும் அறிவு உடையவன்; உள்ளத்தின் - உள்ளத்தினால்; உள்ளக்கெடும் - நினைத்த அளவில் கெடும்.

வெள்ளம் போல வரும் துன்பம் எல்லாம் அவற்றை வெல்லும் வழியை அறியும் அறிவுடையவன் தன் உள்ளத்தினால் நினைத்த அளவிலேயே கெடும்.

உள்ளத்தின் - உருபு மயக்கம்.

**3. இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு**
**இடும்பை படாஅ தவர்.**

இடும்பைக்கு இடும்பை படுப்பர் - துன்பத்திற்குத் துன்பம் தருவர்; இடும்பைக்கு - அத்துன்பத்திற்காக; இடும்பை படாஅதவர் - துன்பப் படாதவர்கள்.

துன்பம் வந்த போது அதற்காக வருந்தாதவர்கள் அத்துன்பங்களுக்கே துன்பம் தருவார்கள்.

படாஅ - இசைநிறை அளபெடை.

**4. மடுத்தவாய் எல்லாம் பகடு அன்னான் உற்ற**
**இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.**

மடுத்தவாய் எல்லாம் – இடையூறு ஏற்படும் இடங்களில் எல்லாம்; பகடு அன்னான் – வண்டியை இழுத்துச் செல்லும் எருதினைப் போன்ற வல்லவன்; உற்ற இடுக்கண் – பெற்ற துன்பம்; இடர்ப்பாடு உடைத்து – அத்துன்பமே துன்பம் அடையும்.

இடையூறு ஏற்படும் இடங்களில் எல்லாம் சோர்வின்றி வண்டியை இழுத்துச் செல்லும் எருதினைப் போன்ற வல்லவன் பெற்ற துன்பம் தானே துன்பம் அடையும்.

**5. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற**
**இடுக்கண் இடுக்கண் படும்.**

அடுக்கி வரினும் – தொடர்ந்து துன்பம் வந்தாலும்; அழிவிலான் – மனம் கலங்காதவன்; உற்ற இடுக்கண் – அடைந்த துன்பம்; இடுக்கண்படும் – துன்பப்படும்.

தொடர்ந்து துன்பம் வந்தாலும் மனம் கலங்காதவன் அடைந்த துன்பம் துன்பப்படும்.

உம் – எச்ச உம்மை

அழிவிலான் – வினையால் அணையும் பெயர்.

**6. அற்றேம் என்று அல்லற்படுபவோ பெற்றேம் என்று**
**ஓம்புதல் தேற்றா தவர்.**

அற்றேம் என்று – பொருளற்றவராயினோம் என்று; அல்லற்படுபவோ – துன்பப்படுவார்களோ; பெற்றேம் என்று – பொருளைப் பெற்றோம் என்று; ஓம்புதல் – பாதுகாத்தலை; தேற்றாதவர் – அறியாதவர்கள்.

பொருள் பெற்றோம் என்று அதற்காகப் பாதுகாத்தலை அறியாதவர்கள் பொருளற்ற போது துன்பப்பட மாட்டார்கள்.

படுபவோ – ஓகாரம் வினாப் பொருளில் வந்தது.

**7. இலக்கம் உடம்பு இடும்பைக்கு என்று கலக்கத்தைக்**
**கையாறாக் கொள்ளாதாம் மேல்.**

இலக்கம் உடம்பு - இலக்கு உடம்பு; இடும்பைக்கு என்று - துன்பத்திற்கு என்று; கலக்கத்தைக் கையாறாக் - கலக்கத்தை இடும்பையாகக்; கொள்ளாதாம் மேல் - அறிவுடையார் கொள்ளமாட்டார்கள்.

துன்பத்திற்கு உடம்பே இலக்கு என்று அறிந்து கலக்கத்தை இடும்பையாக அறிவுடையார் கொள்ள மாட்டார்கள்.

**8. இன்பம் விழையான் இடும்பை இயல்புஎன்பான்**
**துன்பம் உறுதல் இலன்.**

இன்பம் விழையான் - இன்பத்தை விரும்பாதவன்; இடும்பை இயல்பு என்பான் - துன்பம் என்பது இயல்பு என்று கருதுபவன்; துன்பம் உறுதல் இலன் - துன்பம் அடைய மாட்டான்.

இன்பத்தை விரும்பாதவனும் துன்பம் என்பது இயல்பு என்று கருதுபவனும் தன் முயற்சியில் துன்பம் அடைய மாட்டான்.

**9. இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன்.**

இன்பத்துள் இன்பம் விழையாதான் - இன்பம் வந்த போது அந்த இன்பத்தை விரும்பாதவன்; துன்பத்துள் - தனக்குத் துன்பம் வந்த போது; துன்பம் உறுதல் இலன் - துன்பம் அடைய மாட்டான்.

இன்பம் வந்த போது அதனை விரும்பாதவன் தனக்குத் துன்பம் வந்த போது துன்பம் அடைய மாட்டான்.

**10.இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்**
**ஒன்னார் விழையும் சிறப்பு.**

இன்னாமை - துன்பத்தை; இன்பம் எனக் கொளின் - இன்பமாகக் கொண்டால்; தன் ஒன்னார் - தனது பகைவர்; விழையும் சிறப்பு ஆகும்- விரும்பும் சிறப்பு உண்டாகும்.

துன்பத்தை இன்பமாகக் கொண்டால் தனது பகைவர் விரும்பும் சிறப்பு உண்டாகும்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### கீரனுக்கு இலக்கணம் உபதேசித்தது

சோமசுந்தரப் பெருமானது ஆணையின் வண்ணம் சங்கப் புலவர் கூட்டத்தை அடைந்து அங்கு வாழ்ந்து வந்த நக்கீரன் குற்றமெல்லாம் நீங்கியவனாகத் திகழ்ந்தான். சிவபெருமானது திருவடிகளையே சிந்தித்த மனம் கொண்டவனாக விளங்கினான். சிவபெருமானது நெற்றிக் கண் தீயால் எரிந்த மன்மதனை விஷ்ணுவோ பிரம்மாவோ காக்க இயலவில்லை ; ஆனால், அதே நெருப்புக்கண் என்னைச் சுட்டபோது அந்த வெப்பத்தைத் தணித்து என்னைப் பொற்றாமரைக்குளம் காத்தது; ஆகையால் இத் தீர்த்தமே எப்பிறப்பிலும் என்னைக் காப்பாற்றும் என்று நினைந்து ஒவ்வொருநாளும் ஒருமையுடனே திரிகாலத்திலும் அதிலே ஸ்நானம் செய்து சோமசுந்தரப் பெருமானை வழிபாடு செய்கின்ற நியமத்தை மேற்கொண்டு ஒழுகிவந்தான்.

நக்கீரன் நியமம் தவறாமல் தம்மை வந்து வழிபாடு செய்வதை உணர்ந்த ஆலவாய் அண்ணல் திருவுளம் மகிழ்ந்தார்; கீரனுக்கு இன்னும் இலக்கணம் விளங்க வில்லை; அதனாலே, இது வழாநிலைச் சொல், இது வழூஉச் சொல் என்பதை இவன் அறியவில்லை. இவனுக்கு இலக்கணம் போதிக்கச் செய்ய வேண்டும்; குற்றமற்ற நூற் கேள்வியிலே புலமை பொருந்திய ஒருவர் யார் இதனைச் செய்ய இருக்கின்றார்? என்று எண்ணமிடலானார்.

இறைவனின் நிலையுணர்ந்த அங்கயற்கண் அம்மையார் இறைவனைக் கைகூப்பி வணங்கி நின்று, பெருமானே! அங்கை நெல்லிக்கனிபோல அனைத்தும் உணர்ந்த வாலறிவனே! அடியாள் உள்ளத்தில் தோன்றியதைக் கூறுகின்றேன்; செவி சாய்த்தருள வேண்டும். முன்பொருக்கால் மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திராதி தேவர்கள், சனகாதி முனிவர்கள், மற்றும் பிறரும் கைலாச மலையிலே வந்து கூடியிருந்தனர். அந்த பாரத்தைப் பூமி பொறுக்கவில்லை, அதனால் அதன் வடகிழக்கு எல்லை தாழ்ந்தது, தென்மேற்கு எல்லை உயர்ந்தது; அப்போது தேவரீரை அண்டிய தேவர்கள், பூமியைச் சமன் செய்தருளுமாறு தங்களைக் கேட்டுக் கொண்டனர். உடனே

எம்பெருமானும், நம்மை நிகர்த்தவன் அகத்திய முனிவனே ! நமது பார்வதியை நிகர்த்தவள் அவனது மனைவி லோபாமுத்திரையே! என்று கூறி யருளி அம் மாமுனியைத் தெற்கே அனுப்பியருளினீர். செந்தமிழ்நாடு செல்லுங்கால் அகத்திய முனிவரும் தேவரீடத்திலே முதல் தமிழ் இலக்கணத்தைக் கற்றுத்தெளிந்தே புறப்பட்டான். அவன் சென்று ஆண்டுகள் பலவாகிவிட்டன. அவனும் தேவரீரைத் தரிசனம் செய்யும் துடிப்போடு இருக்கிறான். தங்கள் திருவுள்ளத்திற்குச் சம்மதமானால் அகத்தியனைக் கொண்டு நக்கிரனுக்குத் தமிழ் இலக்கணத்தை உணர்வித்தருளலாம் என்பது எளியவளது உள்ளக்கிடக்கை, என்று விண்ணப்பித்துக்கொண்டார்.

உமையாரின் சொற்களைக் கேட்ட சிவபெருமான் மகிழ்ந்தார். அவ்வாறே செய்வோம், என்று திருவாய் மலர்ந்தருளி அகஸ்திய மகரிஷியை நினைத்தருளினார்.

எல்லாம் வல்லானின் திருவுள்ளக் குறிப்பை உணர்ந்து அகஸ்திய முனிவரும் தனது சிரத்தின் மீது கைகுவித்து, தவமெனும் விமானத்திலே தன் மனைவியுடன் ஏறிக்கொண்டு வானவழியே சென்று ஆலவாய் க்ஷேத்திரத்தை அடைந்தார். திருக்கோவில் சென்று சோமசுந்தரக் கடவுளையும் மீனாக்ஷியம்மையையும் தரிசனம் செய்து சிவானந்தத்திலே திளைத்துநின்றார். அப்போதுதான் பொற்றாமரைக் குளத்திலே ஸ்நானம் செய்து நக்கீரனும் நியமத்தோடு இறைவனைத் தரிசிக்க அங்கு வந்து சேர்ந்தான். காலம் கூடியது. திருவருள் கூட்டி வைத்தது. அந்த நிலையிலே சோமசுந்தரக் கடவுள் அகஸ்திய முனிவரைத் தமது திருமுன் வருமாறு கடைக்கணித்து, தவச்செல்வ! இந்த நக்கீரனுக்குத் தமிழ் இலக்கண அறிவு இன்னும் நிரம்பப் பெறவில்லை. நீ எம்மிடத்தில் கேட்டுத் தெரிந்துகொண்டபடியே அவ்விலக்கணத்தைப் பழுதற இவனுக்குக் கற்பிக்கக் கடவாய் என்று ஆக்ஞாபித்தருளினார்.

சோமசுந்தரப் பெருமானின் திருவாணையைச் சிரத்திலும் உளத்திலும் தாங்கிய அகஸ்திய மகரிஷி தம்மை வணங்கி நின்ற நக்கீரனுக்கு நன்றாகத் தெரியும் வண்ணம் செந்தமிழ் நல்லிணக்கத்தைக் கற்றுக் கொடுத்தார். பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் உடன்படல் முதலிட்ட எழுவகை மதங்கள், நால்வகைப் பயன்கள், பத்துக் குற்றங்கள், பத்து அழகுகள், முப்பத்திரண்டு

உத்திகள், காண்டிகை விருத்தியுரைகள் என்றமைந்த எல்லாவற்றையும் ஐயந்திரிபற உபதேசித்தருளினார் அகத்தியமா முனிவர்.

நக்கீரனுக்கு அகஸ்திய முனிவர் தமிழ் இலக்கணம் போதித்த பாங்கினைக் கண்டு சோமசுந்தரப் பெருமானே பெரிதும் மகிழ்ந்தார். அகஸ்தியருக்கு வேண்டிய வரங்களெல்லாம் வழங்கி அவரது இருக்கை செல்லுமாறு விடுத்தருளினார்.

அகத்திய மாமுனிவர் விடைபெற்றுச் சென்றபின் உமாதேவியார் சோமசுந்தரப் பெருமானைப் பார்த்து, நக்கீரனுக்குத் தாங்களே இலக்கணம் போதித்து அருளாது அகத்திய முனிவனைக் கொண்டு போதிக்கச் செய்த காரணம் என்ன? என்று வினவினார். ஆலவாய் அண்ணலும் நக்கீரன் நம்மிடத்தே பொறாமை கொண்டதாலே நாம் போதிக்காமல் அகத்தியனைக் கொண்டு போதிக்கச் செய்தோம், என்று விடைதந்து அம்மையாரின் ஐயம் போக்கியருளினார்.

அகஸ்திய மகரிஷியிடம் இலக்கணம் கற்றுக் கொண்ட பின்பு நக்கீரன் தான் முன்னே செய்த செய்யுள்கள் அனைத்தையும் ஆராய்ந்து பிழைகளைத் திருத்திக் கொண்டான். தனது அறியாமையின் காரணமாக இறைவன் அருளிய திருப்பாடலிலே குற்றங் கூறியதை நினைத்துப் பெரிதும் வருந்தினான். அன்று இறைவனது நெற்றிக் கண் நெருப்பு உடலைச் சுட்டது. அடியேனைத் தண்டித்து அறிவுறுத்திய கருணையங் கடலனைய அண்ணலுக்கு ஏழையேன் என்ன கைம்மாறு செய்ய இயலும் என்று பலவாறு திருவருள் திறனை எண்ணிக் கரைகாணாத இன்பக் கடலுள் ஆழ்ந்தான்.

அதன் பின்னர் நக்கீரன் தான் அகஸ்திய மகரிஷியிடம் கற்றுத் தேர்ந்த செந்தமிழ் இலக்கணத்தை ஏனைய சங்கப் புலவர்களுக்கும் அன்புடன் போதித்தான். நக்கீரன் மூலமாகப் புலவோர் அனைவரும் தொல்லிலக்கணம் தெரிந்து கொண்டனர்.

சோமசுந்தரப் பெருமானின் சேவடிகளையே அல்லும் பகலும் அனவரதமும் தனது உள்ளத்திலே பதித்த நக்கீரன் சிவபக்திச் செல்வனாகத் திகழலானான்.

*(தொடரும்...)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்